மலர் 15 இதழ் 198

NAVAMANI (Tamil Daily) MADRAS

Regd. M No. 7897

Phone No. 76190, 76199

4 பக்கம் 25 காசு



"நவமணி"
சந்தா விகிதம்
1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 0-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 1—4—75 செவ்வாய்

வெளியூர் 2—4—75 புதன்

வெடிகுண்டு
விற்கும் கோஷ்டியை
பிடிக்க முயற்சி

4-ம் பக்கம்

## சட்டசபையில் வாக்குவாதம்

# எம். ஜி. ஆருக்கு கருணாநிதி சவால்

## ராஜினாமா செய்து மீண்டும் தேர்தலுக்கு நிற்க தயாரா?

சென்னை, ஏப். 1— பரங்கிமலை தொகுதி சட்டமன்ற உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு அதே தொகுதியில் மீண்டும் தேர்தலுக்கு நிற்க எம். ஜி. ஆர். தயாரா என்று இன்று சட்டசபையில் முதலமைச்சர் கருணாநிதி சவால் விடுத்தார்.

"அந்த தொகுதியில் கருணாநிதி நிற்க தயாராக இருந்தால் எங்கள் தலைவர் சார்பில் நாங்கள் தயார்" என்று கோவை செழியன் (அ. தி. மு. க.) கூறினார்.

காவல்துறை தீயணைப்பு படை மானிய கோரிக்கைகள் மீது இன்று சட்டசபையில் விவாதம நடந்தது.

கோவை செழியன் (அ தி மு க):— நீதி துறைப் போல போலீஸ் துறையும் தனியாக இயங்க வேண்டும. போலீஸ் துறை ஆளுங்கட்சிக்கு சாதகமாக ஆளுங்கட்சி சொல்படி ஆகிறது. திமுகவின் ஒரு அங்கமாக போலீஸ் துறை மாறிவிட்டது.

எதிர்கட்சிகள்மீது ஜோடிக்கப்பட்ட வழக்குகளை போடுகிருர்கள். சேலம மாவட்டத்தில் எங்கள் கட்சிக்காரர் குஞ்சு கவுண்டர் மீது போடப்பட்ட கொலைவழக்கு ஜோடிக்கப்பட்ட வழக்கு என்று தீர்ப்பளிக்கப்பட்ட பிறகு இந்த அமைச்சர் ராஜினாமா செய்திருக்க வேண்டாமா?

ஜெயம்கொண்டான் தொகுதி எம். எல். ஏ. தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக் கழகத்திற்கு போனதைத் தொடர்ந்து அவர் மீது ஒரு வழக்கு போடப்பட்டது.

முதலமைச்சர் (குறுக்கிட்டு) அவர் தி மு க.வில் இருந்தபோதே வழக்கு பதிவு செய்யப்பட்டது. புகார் கொடுத்தவர் காணுமல் போனதால் புலன் விசாரணை தாமதப்பட்டது.

### தா.மு.க. புகார்

சின்னசாமி: (தா.மு.க) யாரும் அவர்கள் கடத்தவில்லை.

போலீஸ் ஸ்டேஷனில்இருந்து தான் அழைத்து வந்தார்கள். நான் அம்மையாருடைய கட்சிக்கு சென்றதால் என்னைபய முறுத்த என மீது வழக்கு போட்டார்கள்.

முதல் அமைச்சர்:— அம்மையாரும மற்றவர்களும தி. மு. க.வில் இருந்தபோது வழக்கு பதிவு செய்யப்பட்டது.

சின்னசாமி தா. மு. க):— தி. மு. க.வில் நான் இருந்தபோது எப். ஐ. ஆர்.சில் என் பெயர் இல்லை.

முதல்வர்: வேளாங்கண்ணிக்கு சென்றுவிட்டு வந்த கிருஸ்துவ பெண் ஒரு ஓட்டலில் கற்பழிக்கப்பட்டதாகவும அங்கு அந்த எம். எல். ஏ. இருந்ததாகவும புகார் கொடுக்கப்பட்டிருந்தது. வழக்கு அப்போதே பதிவு செய்யப்பட்டுள்ளது.

சின்னசாமி (தா முக): எந்த இடத்திலும்திமுக எம்.எல்.ஏ. சின்னசாமியின் பெயர் கிடையாது. 8 மாதம கழித்துத் தான் என் பெயர் சேர்க்கப்பட்டது. அரசியல் காழ்ப்புணர்ச்சி காரணமாகவே என் பெயர் சேர்க்கப்பட்டது.

முதலமைச்சர்: ஒரு பெண் கற்பழிக்கப்பட்டதாக புகார் வந்தது. திமுகவில் அவர் இருந்தபோது நடவடிக்கை எடுக்காமல் இருந்தால் அவர் வேறு மாதிரியாக திமுகவில அவர் இருந்தபோதே வழக்குப் பதிவு செய்யப்பட்டது.

### கோவைசெழியன் கூறிய புகார்கள்

கோவை செழியன் (அ தி மு க): கற்பழிப்பு சமபவம உண்மையாக இருந்தால் டாக்டர் சர்டிபிகேட் வாங்கி இருக்கவேண்டும. ஆனால் டாக்டர் சர்டிபிகேட் வாங்காமலேயே வழக்கு போடப்பட்டிருக்கிறது. அரசியல் காழ்ப்புணர்ச்சி காரணமாக வேண்டுமென்றே இந்த வழக்கு போடப்பட்டிருக்கிறது.

எங்கள் கட்சி எம. எல். சி. வெங்கா சட்டமன்ற விடுதி முன்பு தாக்கப்பட்டார். இது சமபந்தமாக யாரையும பிடிக்க முடியவில்லை. யாரையும் பிடிக்க முடியாத போலீஸ் அதிகாரி ராஜிநாமா செய்துவிட்டு போக வேண்டாமா?

சேலத்தில் எங்கள் கட்சிக்காரர் சுகுமாரன் உட்பட 2 பேர் சுட்டு கொல்லப்பட்டார்கள். இதுவரை யாரும் கைது செய்யப்படவில்லை. இது ஏன்?

தஞ்சையில் 40 லட்ச ரூபாய் மதிப்புள்ள சிலை திருட்டு போனது சம்பந்தமாக வழக்கு தொடராமல் இருப்பதற்கு காரணம் என்ன?

முதலமைச்சர்: எந்த சிலை என்று சொன்னல் வசதியாக இருக்கும்.

### அ.தி.மு.க. தி.மு.க. சவால்கள்

கோவை செழியன் (அ.தி. மு. க.); தாமஸ நாடார் மீது வழக்கு போடப்பட்டுள்ள சலை அது. சென்னை நகரில் மன்றங்கள் என்ற பெயரில் சீட்டாட்டமும். நடன பயிற்சி வகுப்புகள் என்ற பெயரில் விபசாரமும் நடக்கிறது. அவர்களை ஏன் பிடிக்கவில்லை?

இந்தக் குற்றச்சாட்டுகள் அனைத்தும் உண்மை என்று என்னல் நிருபிக்க முடியும; தன்னுடைய இலாகா தவறு செய்திருக்கிறது என்று ராஜிநாமா செய்கிறேன என் முதல் அமைச்சர் சொன்னாலும சொல்லலாம.

இப்போது வீரபாண்டி ஆறுமுகம்ராஜிநாமா செய்திருக்கிருர். அந்த இடத்தில் தேர்தல் வரும.

அங்கே ஊழல் இருக்கிறது என்று சொல்லி நாங்கள் போட்டியிடுகிருேம. ஊழல் இல்லையென்று நீங்கள் போட்டியிடுங்கள் யார் வெற்றிபெறுகிருர்கள் என்று பார்க்கலாம்.

### கருணாநிதி சவால்

முதல்வர்: ஊழல், ஊழல் என்றுபறை சாற்றும் எம்.ஜி. ஆர்.பரங்கிமலை தொகுதியில் இருந்து ராஜிநாமா செய்து விட்டு மீண்டும் நிற்கதயாரா?

கோவைசெழியன்: முதலமைச்சர் அங்கேநிற்கதயாராக இருந்தால் எங்கள் தலைவர் சார்பில்நாங்கள் தயார்என்று சொல்லுகிறேன்.

## ரேஸ் ஒழிப்பு ஆட்சேப வழக்கு: 11-ந் தேதி விசாரணை

சென்னை, ஏப். 1—குதிரைப் பந்தய ஒழிப்பு சட்டத்தை ஆட்சேபித்து ஹைகோர்ட்டில் தாக்கல் செய்யப்பட்டுள்ள வழக்கு வருகிற 11-ந் தேதி விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

சென்னை ரேஸ கிளப் சங்க செயலாளர்போட்டுள்ளஇந்த வழக்கை நீதிபதி பி. ஆர். கோகுலகிருஷ்ணன் இன்று விசாரணைக்கு ஏற்றுக்கொண்டார்.

இந்த வழக்கு சம்பந்தமாக அரசுக்கு நோட்டீஸ் அளிக்க நீதிபதி உத்தரவிட்டார்.

வழக்கு 11ந் தேதி விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப் படும.

## சி. எஸ். சுக்கு கருணாநிதி பதில்

—2-ம் பக்கம்

## பயிற்சி டாக்டர்களுக்கு ஊதிய உயர்வு: அன்பழகன் அறிவிப்பு

சென்னை, ஏப் 1— வேலை நிறுத்தம செய்து உண்ணாவிரதம இருந்துவரும் அவுஸ சர்ஜன்களுக்கு 25ரூபாய் உயர்த்திக்கொடுக்க அரசாங்கம் இசையும அவர்கள் வேலை நிறுத்தத்தை கைவிட்டுவிட்டு பயிற்சிக்கு செல்ல வேண்டும என்று அமைச்சர் அன்பழகன் இன்று சட்ட மன்றத்தில் தெரிவித்தார்.

ஹவுஸ சர்ஜன்களின் வேலை நிறுத்தம, உண்ணாவிரதம பற்றி இன்று சட்ட சபையில் எட்மண்ட். டாக்டர் ஹாண்டே, ஜோதி வெங்கடாசலம, ஜேம்ஸ், அனந்தநாயகி, சுரேந்திரன், ஏ. சுப்ரமணியம், தங்கமணி, அழகிரிசாமி, எம். கே. பழனிசாமி, சத்தியவாணிமுத்து ஆகியோர் ஒத்திவைப்பு தீர்மானங்களை கொடுத்திருந்தனர்.

இதற்கு பதில் அளித்து அமைச்சர் அன்பழகன் கூறியதாவது;- ஹவுஸ சர்ஜன்கள் அவர்களுடைய கோரிக்கைக்காக முதலில் முதல்வரையோ என்னையோ சந்தித்து பேசவில்லை. எல்லோருக்கும் வேலை கொடுப்பது என்பது இயலாத காரியம் கடந்த மூன்று ஆண்டுகளில் ஆயிரம் பேருக்கு வேலை கொடுக்கப்பட்டுள்ளது. இந்த ஆண்டு 300 பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்க முடியும். 175 ரூபாயாக இருந்த உதவி தொகை 4 ஆண்டுகாலங்களில் 275 ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது. மேலும் 25 ரூபாய் உயர்த்துவதாக இருந்தால் ஒரு ஆண்டுக்கு ரூ. 3 லட்சத்து 2,0000 அதிகம் செலவாகும். அரசாங்கம நல்லெண்ணத்துடன் மேலும 25 ரூபாயை தர இசையும. வேலை நிறுத்தத்தை அவர்கள் நிறுத்திவிட்டு பயிற்சிக்கு செல்ல வேண்டும என்று அன்பழகன் கூறினர்.

அமைச்சரின விளக்கத்துக்குப் பிறகு ஒத்திவைப்புத் தீர்மானங்கள் அனுமதிக்கப் படவில்லை.

## தமிழில் புதிய பட்டப் படிப்பு

சென்னை, ஏப் 1—புதிய தமிழ்ப் பட்டப் படிப்பு ஒன்றைச் சென்னை பல்கலைக் கழகம் அறிமுகப்படுத்துகிறது.

4 ஆண்டு கொண்ட இப் படிப்பைப் படித்து தேறுபவர்களுக்கு 'பி. லிட்'என்னும் பட்டம அளிக்கப்படும்

தமிழை பிரதான மொழியாகக் கொண்டு சென்னை பல்கலைக் கழக மெட்ரிக் தேறியவர்கள். எஸ், எஸ்.எல்.சி. அல்லது ஓ. எஸ். எல்.சி. பரீட்சைகளில் தேறி, பல்கலைக் கழகத்தில் சேருவதற்குத் தகுதிபெற்றவர்கள் ஆகியோா புதிய தமிழ்ப் பட்டப்படிப்பில் சேரலாம்.

திங்களன்று பல்கலைக் கழக செனட் கூட்டம் நடந்தபோது அதில் ம. பொ. சி. பேசுகையில் புதிய பட்டப் படிப்பை வரவேற்ருர்.

இக் கூட்டத்தில் பல்கலைக் கழக துணைவேந்தர் என். டி. சுந்தரவடிவேலு பேசுகையில் மாலைநேரக் கல்லூரிகளில் முதல் தடவையாக "எம். காம்" படிப்பு துவக்கப்படும் என்றும் அது 'செமிஸ்டர்' முறையில் நடத்தப்படும் என்றும் தெரிவித்தார்.

## சென்னை அரசினர் தோட்டத்தில் 10 மாடி கட்டிடம்

சென்னை, ஏப். 1—சென்னை அரசினர் தோட்டத்தில் நட்சத்திர ஓட்டல் ஒன்றை கட்டுவது குறித்து சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் யோசனை ஆரம்ப நிலையில் இருப்பதாக கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் இன்று சட்டசபையில் தெரிவித்தார்.

இதை யொட்டி உறுப்பினர்கள் கேட்ட கேள்விகளும் அமைச்சர் அளித்த பதில்களும் வருமாறு:—

சவுந்திர பாண்டியன் (அ. தி.மு.க.) நட்சத்திர ஓட்டல் கட்டுவதற்கு அரசாங்கம கடன் கொடுக்கிறதா?

அமைச்சர்: அரசாங்கம் நேரடியாக கடன் தருவது இல்லை. சுற்றுலா வளர்ச்சி கழகம சார்பாகவும, வேறு வகையிலும கடன் கொடுக்கப்படுகிறது.

அழகிரிசாமி (கமயூனிஸ்ட்) நாட்டில் ஏழ்மை நிலவும போது சுழலும ஓட்டல் போன்ற கட்டிடங்கள் தேவையா?

### 10 மாடி கட்டிடம்

அமைச்சர்:— சுற்றுலா வளர்ச்சி கழகம் 10 மாடி கட்டிடம் கட்டி அதை இரண்டு அல்லது மூன்று நட்சத்திர ஓட்டல்களாக மாற்றுவதற்கு திட்டமிட்டிருக்கிறது அந்த கட்டிடத்தில் பலவேறு விமான கம்பெனிகளின் நிறுவனங்கள் ஆகியவற்றை அங்கு ஏற்படுத்தினால் அது வெளிநாட்டு பயணிகளுக்கு மிகவும உதவிகரமாக இருக்கும. சென்ற ஆண்டு வெளிநாட்டு பயணிகள் மூலம நமக்கு ரூபாய் 78 கோடி வருமானம் வந்திருக்கிறது. இந்தியாவுக்கு வந்த 4லட்சம் பயணிகளில் 60 ஆயிரம் பேர் தமிழ்நாட்டுக்கு வந்திருக்கிருர்கள். ஆகையால் நமக்கு லாபம் வருகிறது என்பதால் தான் இந்த திட்டம் மேற்கொள்ளப்பட்டது.

### சுழலும் ஓட்டல்

கிட்டப்பா (தி. மு. க.):— இதற்கான மதிப்பீட்டு தொகை எவ்வளவு? எப்போது நிறைவேற்றப்படும்?

அமைச்சர்: இதற்காக திருத்திய மதிப்பீடு இன்னும் வரவில்லை. இந்தஓட்டல்3 கட்டத்தில் அமைக்கப்படும் சுழலும்ஓட்டல்கடைசி கட்டத்தில்அமைக்கலாம்என்றுதிட்டமிட்டு இருக்கிருேம்.

ஏ. சுப்ரமணியம்:— (புது காங்கிரஸ்) சுற்றுலா பயணிகளுக்காக இப்படிப்பட்ட ஓட்டல்கள் அவசியம் என்று அமைச்சர் கூறினர். இப்படிப்பட்ட ஓட்டல்களில் உள்நாட்டுகாரர்களும் கும்மாளம் அடிக்கிருர்கள். ஒருத்தி நகை போட்டால் மற்றவளும் நகைபோட வேண்டும் என்று விரும்பும் பெண்களைப்போல மற்றவர்கள் இப்படிப்பட்ட ஓட்டல்களை கட்டுகிருர்கள். என்பதை பார்த்து இங்கும் கட்டப்படுகிறதா?

அமைச்சர்: வெளி நாட்டில் உள்ள பல நகர்களிலும் இப்படிப்பட்ட விடுதிகள் உள்ளன. நம் நாட்டிற்கு வரும் வெளிநாட்டுக்காரர்கள் பணத்தை செலவழிக்க வேண்டுமென்று வருகிருர்கள் அப்படிப் பட்டவர்களுக்கு வாய்ப்புகளைஏற்படுத்தவேண்டும்.

கும்மாளம அடிப்பது,சிறிய ஓட்டல்களில் கூட நடைபெறுகிறது. உலக சுற்று பயணிகளின் வசதிகளுக்கு ஏற்ப இப்படிப்பட்ட திட்டங்களை செயல்படுத்துகிருேம.

## வீரபாண்டி எம்.எல்.ஏ. ராஜினாமா

# சட்டசபையில் காரசாரமான கேள்விகள்

சென்னை, ஏப். 1—வீரபாண்டி தொகுதி சட்டமன்ற உறுப்பினரான ஆறுமுகம் (தி.மு.க.) அவருடைய எம்.எல்.ஏ. பதவியை ராஜிநாமா செய்து விட்டதாக வெளியிடப்பட்டிருந்த அறிவிப்பு சம்பந்தமாக இன்று சட்டசபையில் சரமாரியாகக் கேள்விகள் கேட்கப்பட்டன.

ஏற்கனவே தாம வெளியிட்டிருந்த தகவலுக்கு மேல் எதுவும சொல்வதற்கில்லை என்று சபாநாயகர் பதிலளித்தார்.

இன்று சட்டசபையில் கேள்விநேரம் முடிந்ததும அ. தி.மு.க. துணை தலைவர் எட்மண்ட் எழுந்து பின்வருமாறு கேட்டார். 'நேற்று வீரபாண்டி ஆறுமுகம ராஜிநாமாசெய்ததாகசபாநாயகர் அறிவித்துஇருந்துமதாம அப்படி ராஜிநாமா செய்யவில்லை என்று வீரபாண்டி ஆறுமுகம கூறியதாக நேற்று மாலை ஒரு பத்திரிகையில் செய்தி வந்தது இப்போது வீரபாண்டி ஆறுமுகத்தின் நிலையென்ன? இது குறித்து ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டதா?" என்று எட்மண்ட் கேட்டார்.

இது சமபந்தமாக பல உறுப்பினர்கள் ஒழுங்கு பிரச்னைகளை எழுப்பி விளக்கம கேட்டனர்.

டாக்டர் ஹாண்டே (அ. தி. மு. க): ராஜிநாமா செய்யும உறுப்பினர் கூறும காரணத்தை தெரிவிக்கவேண்டியதில்லை என்று நேற்று சபாநாயகர் கூறினர். காரணத்தை தெரிவிக்கக்கூடாது என்று விதி ஒன்றும இல்லை.

### "அவசர முடிவு அவசியமில்லை"

நெல்லிக்குப்பம கிருஷ்ணமூர்த்தி (தி. மு க): நேற்று இந்தத்கவல்அறிவிக்கப்பட்டபோது. நான் சபையில்இல்லை சபையில் சில நேரங்களில் சில உறுப்பினர்கள் சவாலாக ராஜிநாமா செய்கிறேன் என்று கூறுவது உண்டு. இவைகளையெல்லாம மனதார கூறுவதாக நினைத்து எடுத்துக் கொள்ளக் கூடாது.

முன்பு ஒரு தடவை அ. தி. மு. க, உறுப்பினர் வேலப்பனும் திமுக. உறுப்பினர் ஆறுமுகமும் ராஜிநாமா செய்வதாக கூறினர்கள். அதையெல்லாம் ஏற்றுக்கொள்வதாக சொல்லிவிட முடியுமா? டெலிபோன் மூலமாக சபாநாயகர் ஆறுமுகத்திடம் கேட்டதாககூறப்பட்டது அது முறையல்ல. ஆறுமுகத்துக்கு கடிதம் எழுதுங்கள். அல்லது அவரை வரவழைத்து விசாரணை செய்யுங்கள். இந்தவிஷயத்தில் இவ்வளவு அவசரமாக முடிவு எடுக்க வேண்டிய அவசியம் இல்லை. கடிதத்தில் இருப்பது அவரது கையெழுத்துதானு? வேறு யாருடைய கையெழுத்தா? என்பதை ஆராய்ந்து சீரிய முடிவு எடுக்கவேண்டும.

நான்கூட பலருக்கு நன்னடத்தை சர்டிபிகேட் கொடுத்திருக்கிறேன. சிலருக்கு வெறும பேப்பரில் கையெழுத்தை மட்டும் போட்டு கொடுத்திருக்கிறேன் அப்படிப்பட்ட பேப்பர்கள் எதுவும உங்களிடம் வராமல் இருக்கவேண்டுமென்று நான் கருதுகிறேன்.

சபாநாயகர்: பேசும்போது ஒரு அளவோடு நில்லுங்கள். அளவை மீறி போககூடாது

கோவை செழியன் (அ.தி. மு.க.):— தாங்கள் இந்த சபைக்கு தலைவர். தாங்கள் கூறும எந்த கருத்தையும் கண்ணியத்துடன் ஏற்றுக் கொள்ள நாங்கள் கடமைப் பட்டவர்கள். தாங்கள் ஆறுமுகத்துடன் பேசினேன் என்று கூறியதை ஒத்துக் கொள்ளவேண்டும், அதை சந்தேகிப்பது முறையா?

கிருஷ்ணமூர்த்தி (தி மு க): டெலிபோனில் பேசுவதை வைத்துக் கொண்டு ஒரு விஷயத்தை உறுதிசெய்ய முடியாது கோவை செழியன்பேசுவதுபோல் கூட என்னல் டெலிபோனில் பேசமுடியும்.

கோவை செழியன்: என்னைப்போல் பேசமுடியும என்று கிருஷ்ணமூர்த்தி கூறுகிருர். எனக்கு பயமாக இருக்கிறது. யார் யார் மாதிரியெல்லாம் அவர் பேசியிருக்கிருரோ?

### நிர்ப்பந்தமா?

ஹாண்டே (அ தி மு க):— ஆறுமுகம ராஜிநாமா செய்ததற்கு ஏதாவது நிர்ப்பந்தம காரணமா? கிருஷ்ணமூர்த்தி சொல்வது போல் வெற்று பேப்பரில் கையெழுத்து போட்டு கொடுத்தாரா?

சுரேந்திரன் (புது காங்.):— இந்தராஜிநாமா விஷயத்தில் இவ்வளவு சர்ச்சைஏன்? ஏதாவது அவருக்கு நிர்ப்பந்தம ஏற்பட்டதா?

### சபாநாயகர் பதில்

சபாநாயகர்:— நேற்று நான் இது குறித்து சொன்னதற்கு மேல் எதுவும சொல்வதற்கில்லை.

பொன்னப்ப நாடார் (பழைய காங்கிரஸ்):— நேற்று நீங்கள் விசாரணை நடத்தியிருக்கிறீர்கள். அப்படியிருக்கும்போது அது குறித்த காரணங்களை அறிவிக்க என்ன கஷ்டம?

டாக்டர் ஹாண்டே:— ராஜிநாமா கடிதத்தை ஒருவர் கையாலேதான எழுத வேண்டும என்று விதி யிருக்கிறது: ஆகையால் அந்த கடிதத்தை நாங்கள் பார்க்க வேண்டும்.

### வாபஸ்?

தங்கமணி (கம்யூனிஸ்டு):— ராஜிநாமாவை தங்களுக்கு எழுதவேண்டும என்று அரசியல் சட்டம் கூறுகிறது. ராஜிநாமாவை வாபஸ வாங்குகிறேன் என்று இப்போது ஆறுமுகம் எழுதியிருக்கிருரா? அது குறித்து மறுபரிசீலனை செய்யப்படுமா?

எகிமண்ட்: (அ தி மு க) ஒருவரது ராஜிநாமாக கடிதத்தில் அவரது கையெழுத்து உண்மையானது தானு? எந்தவித நிர்ப்பந்தம் இல்லாமல் எழுதப்பட்டிருக்கிறதா என்று ஆராயவேண்டுமென்று சட்டத்தில் கூறப்பட்டிருக்கிறது.

கிருஷ்ணமூர்த்தி கூறியது போல் வெற்று காகிதத்தில் எழுதப்பட்டிருக்கிறதா என்பதை போன்ற சந்தேகத்தை நீக்குவதற்கு அந்த கடிதம் எதிர்க்கட்சித் தலைவர்கள் பார்வைக்கு வைக்கப்படுமா?

சபாநாயகர்:— கடிதம் வந்தது அது உண்மைதானு? என்பதை விசாரித்து திருப்தி அடைந்தேன். மேற்கொண்டு எதுவும இதுகுறித்து சொல்வதற்கில்லை.

கிருஷ்ணமூர்த்தி (தி முக): உங்களுக்கு இருக்கும நிர்ப்பந்த நிலை எனக்குத் தெரியும ஆகையால் இதில் ஒரு முடிவு எடுப்பதற்கு உங்களுக்கு சிரமமாக இருக்கும.

சபாநாயகர்:— எனக்கு வேறு எந்த நிலையும இல்லை. சபைக்கு தலைமைவகித்து நடத்தி செல்வதுதான் என் கடமை. இதை ஒவ்வொருவரும உணர்ந்து நடந்தால் போதும.

பொன்னப்ப நாடார் (ப. காங்கிரஸ்):— சபாநாயகருக்கு நிர்ப்பந்த நிலை என்று கூறியதை கிருஷ்ணமூர்த்தி வாபஸ் பெற வேண்டும.

கிருஷ்ணமூர்த்தி (திமுக):— வாபஸ் பெறுகிறேன்.

# நவமணி

சென்னை 1—4—1975 செவ்வாய்க்கிழமை


## தமிழ்நாட்டு ஏற்றுமதி

தமிழ்நாட்டிலிருந்து பொருள்களை வெளிநாட்டிற்கு ஏற்றுமதி செய்வது மிகக்குறைந்த அளவாக இருப்பது வருந்தத்தக்கது.

பழங்காலந்தொட்டு ஏற்றுமதிசெய்யப்படும் தோல், காபி போன்றவைகளைத் தவிர, சிறு தொழில்கள், கைத்தொழில்கள் உற்பத்தி செய்யும் பொருள்களை ஏற்றுமதி செய்ய நல்லதொரு வாய்ப்பு இருந்தும் அவைகளை பெரிய அளவில் ஏற்றுமதி செய்ய முடியாமைக்கு பல காரணங்கள் உண்டு.

முதலில் இங்கு உற்பத்தியாகும் பல வகை பொருள்களைப் பற்றிய முழு விபரம் வெளிநாடுகளுக்கு தெரிய வேண்டும். அவர்களுடைய தேவைகள் என்ன என்பதை நம்மவர்கள் தெரிந்துகொண்டு அவற்றிற்கு ஏற்ப பொருள்களை தயார் செய்ய வேண்டும்.

வெளிநாடு சென்று அறிந்துவர சிறு தொழில்கள் செய்பவர்களுக்கு பொருளாதார வசதி, பேச்சு வார்த்தை நடத்த தொழில் நுட்ப தொடர்பு இவைகள் இருப்பதில்லை. ஆகவே பம்பாய், டெல்லி போன்ற இடங்களில் உள்ள ஏற்றுமதி நிறுவனங்கள் தமிழக பொருள்களை குறைந்த விலைக்குப் பெற்று ஏற்றுமதி செய்து அதன் பலனை அடைந்துவருகின்றன.

அடுத்து சென்னை துறைமுகத்திலிருந்து அனுப்ப ஏற்படும் செலவும் தாமதமும் காரணம் என்பதை தொழில்துறை செயலாளர் திரு. ஹர்பான் சிங் சுட்டிக்காட்டியுள்ளார்.

தமிழகத்திலிருந்து ஏற்றுமதியை பெருக்க சிறு தொழில் முன்னேற்ற வாரியம் (Sidco) ஒரு தனி அமைப்பை உருவாக்க முயலுவதை வரவேற்றாலும் அரசாங்க கட்டுத் திட்டங்களில் அவர்கள் விரைவாக உடனடியாக செய்ய முடியாது என்றே கருதுகிறோம்.

ஆகவே தொழில்துறை அமைச்சர் திரு சாதிக் பாஷா இத்துறையில் தனிக்கவனம் செலுத்தி, ஏற்றுமதியை அதிகரிக்க தக்க திட்டம் தீட்டி செயலாற்ற விரும்புகிறோம்.

# வறுமை ஒழிப்பு என்பது ஏமாற்றுக் கோஷம்: ஜெயப்பிரகாஷ் பேச்சு

**புவனேஸ்வர், ஏப். 1—"வறுமை ஒழிப்பு" என்பது வெறும் ஏமாற்று கோஷமே என்று ஜெயப்பிரகாஷ் நாராயண் கூறினார்.**

"சோஷலிசத்தின் பெயரால் பிரதமர் இந்திரா காந்தி எழுப்பும் வெற்றுக் கோஷங்களுக்கு மக்கள் இரையாகி விடக்கூடாது" என்றும் அவர் சொன்னார்.

ஒரிசாவின் தலைநகரான புவனேஸவர் நகரில் உத்கல் பல்கலைக் கழக வளவுக்குள்ளாக பல்கலைக் கழக மாணவர் சங்கம் சார்பில் ஒரு கூட்டம் நடந்தது. இக் கூட்டத்தில் பேசுகையில் ஜெயப்பிரகாஷ் மேற்கண்டவாறு சொன்னார்.

"இந்திரா காந்தியின் சோஷலிசம் நாட்டில் வறுமையைத்தான் நீடிக்கும்" என்றும் அவர் கூறினார்.

### ஏமாற்றுகோஷம்

"வறுமை ஒழிப்பு கோஷம் வெறும் ஏமாற்று கோஷமே. ஏனெனில் அக்கோஷம் பணக்காரர்கள் மேலும் பணக்காரர் ஆவதற்கே உதவுகிறது தவிர, புது காங்கிரஸ் கட்சிக்குப் பணம் தரும் சுயநல சக்திகளுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது" என்றார் ஜெயப்பிரகாஷ்.

"குவிந்து கிடக்கும்" பொருளாதார அரசியல் அதிகாரங்களைப் பரவலாக்காத வரையில் சமூகத்தை பொருளாதார அரசியல், சமூக ரீதியில் மாற்றியமைக்க முடியாது. சொத்துக்களை தர்மகர்த்தா முறையின் கீழ் கொண்டு வர வேண்டும் என்று மகாத்மா காந்தி கூறிய திட்டமானது சோஷலிசத்தையும் கம்யூனிசத்தையும்விட மேலானது தேசிய சொத்துக்களை சமூக உடைமையின் கீழ் கொண்டு வரவேண்டும் என்பதே என் கருத்தாகும். அவை அரசுடைமை ஆவதை நான் ஆதரிக்கவில்லை

### ஊழல்

"ஊழல் கடந்த காலத்திலும் இருந்தது. ஆனால் 1971க்குப் பிறகு எல்லாமட்டங்களிலும் ஊழல் பெருகி கடந்த ஆண்டுகளில் இருந்த ஊழலை மிஞ்சிவிட்டது. ஊழலை ஒழித்தால் ஒழிய நாட்டுக்குவிமோசனம் இல்லை" என்றும் அவர் கூறினார்.

ஊழல் மந்திரிகள், நிர்வாகிகள் ஆகியோரின் அநியாயமான ஜனநாயக விரோதமான உத்தரவுகளுக்கு கீழ்ப்படிய வேண்டாம் என்று ராணுவப் படைகளுக்கும் போலீசுக்கும் வேண்டுகோள் விடுக்க நான் தயங்கமாட்டேன் அதற்கு உகந்த நேரம் வராததால் இன்னும் நான் வேண்டுகோள் விடாமல் இருக்கிறேன்" என்றார் அவர்.

"என்மீது வழக்குப்போடும் பொருட்டு, அப்படி நான் கூறினேனா என்று பிரதமர் அலுவலக ஆராய்ச்சி பிரிவு என்னுடைய பேச்சுகளை ஆராய்ந்துவருகிறது. எனினும் நான் கடைசி மூச்சு உள்ளவரை பூரணப் புரட்சியின் ஜோதியை ஏந்திச் செல்வேன்" என்றும் ஜெயப்பிரகாஷ் நாராயண் சொன்னார்.

## தமிழ் நாட்டில் 1 கோடி மாடுகள்: சட்டசபையில் தகவல்

சென்னை, ஏப். 1—தமிழ் நாட்டில் 1974ம் ஆண்டு கணக்கெடுப்பின்படி 1 கோடியே 70 ஆயிரம் மாடுகளும், 28 லட்சம் எருமைகளும் உள்ளதாக சட்டசபையில் தெரிவிக்கப்பட்டது.

கால்நடை வளர்ப்புத் துறைக்கான மானியக்கோரிக்கையை தாக்கல் செய்து அமைச்சர் ஓ. பி. ராமன் ஆற்றிய உரையில் இத்தகவல் தெரிவிக்கப்பட்டுள்ளது.

தமிழ் நாட்டில் மற்றும 56 லட்சம செமமறி ஆடுகளும 40 லட்சம வெள்ளாடுகளும 5 லட்சம பன்றிகளும ஒரு கோடியே 33 லட்சம கோழிகளுமுள்ளதாக அவர் தனது உரையில் தெரிவித்தார்.

கால்நடைகளின் மேம்பாட்டுக்காக அரசு எடுத்துள்ள நடவடிக்கைகளை அமைச்சர் விவரிவித்தார்.

சுகாதார அதிகாரிகள் வரையறுத்துள்ளபடி நபர் ஒருவருக்கு நாள் ஒன்றுக்கு 280 கிராமபால் தேவைப்படுவதாகவும ஆனால், தமிழ் நாட்டில் இப்போது ஒருவருக்கு நாள் ஒன்றுக்கு சராசரியாக 84 கிராம பால்தான் கிடைப்பதாகவும அமைச்சர் தெரிவித்தார்.

கால்நடைகளின் தரத்தை உயர்த்த, பால்கிடைக்கும் அளவை அதிகரிக்கும் பொருட்டு டென்மார்க் அரசின் உதவியுடன் தஞ்சை மாவட்டத்தில் ஈச்சங்கோட்டையில் அமைக்கப்படும். பெரிய கால்நடைப் பண்ணை பற்றிய விவரங்களை அமைச்சர் வெளியிட்டார்.

ஈச்சங்கோட்டை பண்ணைக்கு 240 ஜெர்சி கிடேரிகளையும் 10 ஜெர்சி காளைகளையும் சில கருவிகளையும் டென்மார்க் அரசு இலவசமாக வழங்குகிறது. டென்மார்க் உதவியுடன் ஒரத்த நாட்டில் உறைய வைக்கப்பட்ட விந்து சேமிப்பு நிலையமும் அமைக்கப்பட்டு வருவதாக அமைச்சர் தெரிவித்தார்.

சி. சுப்பிரமணியத்திற்கு கருணாநிதி பதில்

# "மற்ற முதலமைச்சர்கள் கேட்காவிட்டாலும் தமிழக உரிமைகளைக் கேட்போம்"

**சென்னை, ஏப். 1—மற்ற மாநிலங்களின் முதலமைச்சர்கள் வற்புறுத்தாவிட்டாலும், தமிழ்நாட்டின் உரிமைகளை அழுத்தந்திருத்தமாக வலியுறுத்துவோம் என்று முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.**

ஆளுநர், அமைச்சர்கள், மாவட்ட நிர்வாகம் பற்றிய கொள்கைக் குறிப்பின் மீது மேலவையில்நடந்த விவாதத்திற்கு முதலமைச்சர் நேற்று பதிலளித்தார்.

முதலமைச்சர் கருணாநிதி கூறியதாவது:

வறட்சி நிவாரணப் பணிகளுக்கு என்று தனியாக தொகை ஒதுக்குகிறார்களா? எவ்வளவு ஒதுக்கப்போகிறார்கள்? திட்டத்திலே சேர்த்து ஒதுக்கிறார்களா? அப்படி ஒதுக்கப்படுகிறப் பணத்தை அவர்கள் திட்டத் தொகையிலே கழித்துக் கொள்ளப் போகிறார்களா! அப்படிசெய்தால் நம்முடைய திட்டங்கள் எல்லாம் நல்ல முறையில் செயல்பட முடியாமல் தடைபட்டுவிடும் என்றுதான் நான்சொன்னேன் ஏதோ இப்போது வறட்சி நேரத்தில் பணத்தை அனுப்பிவிட்டு, வறட்சிக்காக அனுப்பினோம் என்று சொல்லிவிட்டு, வறட்சிக்காக மத்திய சர்க்கார் அனுப்பியது என்று மகிழ்ச்சி அடைய செய்துவிட்டு, பிறகு இரண்டு ஆண்டு காலததிற்குப் பிறகு திட்டத் தொகையிலே கழித்துக்கொள்வோம என்று சொன்னால், இந்தச் சர்க்கார் அல்ல, வேறு எந்தச் சர்க்கார் வந்தாலும், அந்தத் தொல்லையை பொருளாதார துறையில் நிதியாதாரத்திலே அனுபவிக்கவேண்டி வரும் எனபதறகாகத்தான் நான் இதைக் கேட்கிறேன்.

சுப்பிரமணியம் தமிழ்நாட்டிற்கு மாத்திரமல்ல, ஆறுவது நிதிக்குழு வகுத்துள்ள வரையறையின்படி எல்லா மாநிலங்களுக்கும் அது பொருந்தும், என்று சொல்லியிருக்கிறார். எல்லா மாநிலங்களின் சார்பில் தான் சொல்கிறேன். எல்லா மாநில முதலமைச்சர்களும் அதைக் கேட்கிறார்களோ இல்லையோ தெரியாது. ஆனால் நாம் மாநில உரிமைகளை அழுத்தந்திருத்தமாக வலியுறுத்தி கேட்கின்ற இடத்தில் இருக்கிறோம். முறையாக கேட்டு வருகிறோம். ஆகவே திட்டங்களிலே கழித்துக் கொள்ளாதவகையில் வறட்சி நிவாரணப் பணிகளுக்காக ஒதுக்கப்படுகின்ற பணம் தனியாக வரவேண்டுமென்று சொல்லி வருகிறோம்.

எதிர்க்கட்சித் தலைவர் நிதிநிலை அறிக்கையில் 26 கோடி ரூபாய் துண்டு விழுகிறது. நாம் மத்திய சர்க்காரிடம் எதிர்பார்த்த பணம் வராவிட்டால், இந்த துண்டுவிழும் தொகையை எப்படி சரிக்கட்டுவது என்று கேட்டார். நாம் நிதிநிலை அறிக்கையில் வறட்சி நிவாரணப் பணிகளுக்காக 50 கோடி ரூபாய் செலவாகும் என்று செலவைக் காட்டித்தான் நிதிநிலை அறிக்கையினைத் தயாரித்திருக்கிறோம். மத்திய சர்க்காரிடம் நடப்பு ஆண்டு கணக்கில் 20 கோடி ரூபாய் தரவேண்டுமென்று கேட்டிருக்கிறோமேயல்லாமல், அதை வரவுக் கணக்கில் நாம் எடுத்துக்காட்டவில்லை. 26 கோடி ரூபாய் துண்டு விழுவதில், வரி மூலமாக ஆறு கோடி ரூபாய் சரி கட்டப்படும். மீதமுள்ள 20 கோடி ரூபாயைத் திட்டத் தொகையை மேலும் அதிகப்படுத்தி தரவேண்டுமென்று மத்திய சர்க்காரிடம் கேட்டுக்கொண்டிருக்கிறோம். இதுதான் உள்ள நிலைமையாகும்.

### கூலி வேறுபாடு

தொழிலாளர்களுக்கு வறட்சி நிவாரணப் பணிகளுக்கான கூலி தருவது பற்றி இங்கே பேசப்பட்டது. ஆளுநர் சில இடங்களில் சென்று பார்த்து, இந்த கூலி விகிதங்களைப் பற்றி எடுத்துச் சொன்னக் கருத்துக்கள் பத்திரிகைகளில் வந்ததைப்பற்றி வெளியேயும் பேசுகிறார்கள். இநத மன்றத்திலும் பேசினார்கள். அது எனறு என்று நான் சொல்ல மாட்டேன்.

அரசின் சார்பில் கூலி எவ்வளவு என்று நிர்ணயிக்கபட்டிருக்கிறதா என்று தாமோதரன் கேட்டார். மூன்று ரூபாய்க்குக் குறையாமல் இந்தப் பணியில் ஈடுபடுகின்ற தொழிலாளர்களுக்குக் கூலி தரப்படவேண்டும் என்று அரசின் சார்பில் ஆணை பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. சில இடங்களில் ஐந்தாறு ரூபாய் வரை கூலி என்கிற வகையில் வித்தியாசமாக இருக்கிறது என்று செய்திகள வெள்வருகிற தென்றால், ஒப்பந்தக்காரர்கள் சில இடங்களில் ஒப்பந்தம் செய்து கொள்கிறார்கள்; அவர்கள் அந்த வேலைகளை முடிப்பதற்காகதொழிலாளர்களை அமர்த்துகின்ற நேரத்தில் மனம் ஒப்பி வருகின்ற தொழிலாளர்கள்தான் அந்த வேலைக்கு அமர்த்தப்படுகிறார்கள்; இன்னின்ன 'தாக்கு'களை மொத்தமாக வெட்டுகிறோம் என்று வேலையை எடுத்துக் கொள்ளும் போது, இரண்டு மூன்று பேர் சேர்ந்தோ, அல்லது குடும்பம் குடும்பமாகவோ அந்தக் காரியங்களில் ஈடுபடுகிறார்கள். அந்த வகையில் அவர்களுக்கு 'தாக்கு'களின் அளவுபடி கூலி கொடுக்கும்போது, அது வித்தியாசப்படுகிறது. ஆகவே இதைத்தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாது. ராமகிருஷ்ண தேவர், "கூலி விகிதங்களில் எந்தவிதமான தவறும் நடைபெறவில்லை. ஒழுங்காக நடைபெறுகிறது" என்று சொன்னார். இந்த வேலைகளில அனுபவம் உள்ளவர்களுக்கு நிச்சயமாக இதில் தவறு காண முடியாது.

### குடியிருப்பு மனை

எதிர்க்கட்சித்தலைவர் காங்கிரஸ் ஆட்சிக காலத்தில் தொடங்கப்பட்ட நல்ல காரியங்களை எல்லாம் இந்த அரசு தொடர்ந்து நடத்திவருகிறது என்று குறிப்பிட்டார். நான் காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் என்ன நடந்தது என்ற வாதத்தை எழுப்ப விருமபவில்லை. அவர்களைத் தொடர்ந்து நல்ல காரியங்களை நாங்கள் நடத்திவருகிறோம் என்பதையாவது எதிர்க்கட்சித்தலைவர் ஒத்துக்கொண்டாரே எனபதற்காக மகிழ்ச்சி அடைகிறேன் பட்டா கொடுப்பது என்பது பாராட்டுக்குரியதுதான். என்றாலும்கூட, ஏற்கனவேயே அவர்கள் அந்த வீட்டில்தான் குடியிருந்தார்கள்; அவைகள்தான் பட்டா செய்து கொடுக்கப்படுகிறது என்று எதிர்க்கட்சித் தலைவர் குறிப்பிட்டார். 1947-ம் ஆண்டிலிருந்து 1967 வரை 63770 பேர்களுக்கு வீட்டு மனைப் பட்டா காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் தரப்பட்டிருக்கிறது. நான் கேட்பதெல்லாம், ஏற்கனவே அதே வீடுகளில்தானே அவர்கள் குடியிருந்தார்கள், அவர்களுக்கு ஏன் பட்டா வழங்கினார்கள்? பட்டாகொடுத்தால்தான் அது நிலைக்கும் என்பதற்காகத்தான் அது தரப்பட்டது. ஆனால் 1967-க்கு பிறகு இந்த எட்டாண்டு காலத்தில் 4,94,692 பேர்களுக்கு இந்த அரசின் சார்பில் பட்டா வழங்கப்பட்டிருக்கிறது.

தான் குடியிருக்கிற மனை தனக்குச் சொந்தமாகவேண்டுமென்பதற்காக ரத்தப்புரட்சி எல்லாம் செய்திருக்கிறார்கள். ஆயிரக்கணக்கில் சிறை சென்றிருக்கிறார்கள். அவர்களுக்காக குடியிருப்பு மனை சட்டத்தைக் கொண்டுவந்து, இன்றைக்கு தமிழகம் முழுவதும், 1 73 748 விவசாயத் தொழிலாளர்களுக்கு குடியிருப்பு மனைகள் சொந்தமாக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

### ஹோட்டல்களுக்கு எச்சரிக்கை

உணவுப் பண்டங்களின் விலைகளை ஏல்கனவே ஒப்புக்கொண்ட விலைகளில் விற்காவிட்டால், நியாய விலையில் ஹாட்டல்காரர்களுக்கு அளிக்கப்பட்டு வரும் உணவு தானியங்கள் சப்ளை நிறுத்தப்படும் என்று கருணாநிதி ஹோட்டல்நிர்வாகத்தினரை எச்சரித்தார்.

இட்லி விலைகள், அரசு ஹோட்டல் நிர்வாகத்தினர் ஒப்புக்கொண்ட மாதிரி இல்லாமல் அதிகம் வைத்து விற்கிறார்கள் என்று சபையில் கூறப்பட்ட புகாரைக் குறிப்பிட்டே முதல்வர் மேற்கண்டவாறு கூறினார். சென்னை ஹோட்டல்களுக்கு அரசாங்கம் 200 டன் அரிசியை நியாய விலையில் அளித்திருக்கிறது என்று முதலமைச்சர் தெரிவித்தார்.

# மெஜாரிட்டி இழந்தது: அச்சுதமேனன் மந்திரி சபைக்கு ஆபத்து

**கோழிக்கோடு, ஏப். 1—கேரளாவில் அச்சுத மேனன் தலைமையிலான கூட்டணி மந்திரி சபை மெஜாரிட்டி இழந்துவிட்டது. இதனால் ஆட்சி கவிழும் அபாயநிலை ஏற்பட்டுள்ளது.**

கேரளாவில் முஸ்லிம் லீக் கட்சியிலிருந்து விலகிய 6 எம். எல். ஏக்களும் அச்சுதமேனன் மந்திரிசபைக்கு அளித்துவந்த ஆதரவை வாபஸ் பெற்றுக் கொண்டார்கள். இதனால் மந்திரி சபை மெஜாரிட்டி இழந்துவிட்டது.

கேரளகூட்டணி மந்திரிசபையில்இந்தியகம்யூனிஸ்டு கட்சி, புது காங்கிரஸ், முஸ்லிம் லீக், புரட்சிசோஷலிஸ்டு, பி.சோ. ஆகிய கட்சிகள் இதில் இடம் பெற்று உள்ளன.

ஆளும் கூட்டணி கட்சிகளில் ஒன்றான முஸ்லிம் லீக் கட்சியில் பிளவு ஏற்பட்டு 6 எம். எல். ஏ.க்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டது. ஆனால் அந்த 6 எம். எல்.ஏ.க்களும் கட்சியிலிருந்து விலகிக் கொண்டுவிட்டார்கள்.

இந்தத்தகராறில் சமரசம் செய்துவைக்க அகில இந்திய முஸ்லிம் லீக் கட்சி தலைவர் இப்ராகீம் சுலைமான் சேட் முயற்சி எடுத்துக் கொண்டார். ஆனால் சமரசம் ஏற்படவில்லை

### மெஜாரிட்டி இழந்தது

அந்த 6 எம். எல். ஏக்களும் நேற்று திருரங்காடி என்ற இடத்தில் கூடி, அச்சுதமேனன் மந்திரி சபைக்கு அளித்துவந்த ஆதரவை வாபஸ் பெற்றுக்கொள்வது என்று முடிவுசெய்தனர்.

இந்த முடிவை முதல்மந்திரி அச்சுதமேனனுக்கு ஒரு கடிதம் மூலம் தெரியப்படுத்துவது என்றும் அதன் நகல்களை கவர்னருக்கும், சட்டசபை சபாநாயகருக்கும் அனுப்புவது என்றும் தீர்மானித்தனர்

இந்த 6 எம்.எல்.ஏ.க்களும் ஆதரவை வாபஸ் பெற்றுக் கொண்டதால், அச்சுதமேனன் மந்திரி சபை மெஜாரிட்டி பலத்தை இழந்துவிட்டது.

134 உறுப்பினர்களைக் கொண்ட மந்திரி சபைக்கு இருந்த பலம் 70விருந்து 64 ஆகக் குறைந்து விட்டது. இதில் மந்திரி சபைகவிழும் ஆபத்து ஏற்பட்டுள்ளது.

எதிர்க் கட்சிகளின் பலம் 67 ஆக உயர்ந்துள்ளது.

போலீஸ் விசாரணை

## மந்திரி கார் முன் பாறாங்கல்

வேலூர், ஏப். 1—தமிழக அரிஜன நல அமைச்சர் ராஜாங்கம் கார் வர இருந்த ரோட்டின் குறுக்கே பாறாங்கல் வைக்கப்பட்டிருந்தது. இதை, மந்திரி கார் முன் சென்று கொண்டிருந்த பைலட் காரில் சென்ற போலீசார் கண்டுபிடித்து அகற்றினர். இதனால் மந்திரியின் கார் விபத்து ஏதுமின்றி தப்பியது. அந்தச் சம்பவம் நேற்று இரவு 10-30 மணிக்கு வேலூர் அருகே உள்ள அயிலம் என்ற இடத்தில் நடந்தது. இதுபற்றி போலீசார் வழக்குப் பதிவு செய்து விசாரித்து வருகிறார்கள்.

## ஆசிரியர் நியமனம் பற்றி நெடுஞ்செழியன்

சென்னை ஏப். 1—பாலர் கல்வி ஆசிரியர் பயிற்சியும் மாண்டிசோரி கல்வி ஆசிரியர் பயிற்சியும முடித்தவர்களை ஆரம்பப்பள்ளிகளில் முதல் வகுப்பு இரண்டாவது வகுப்புகளில் ஆசிரியர்களாக நியமிப்பது குறித்து அரசு ஆலோசிப்பதாக கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் சட்டசபையில் தெரிவித்தார்.

36 மீனவர்கள் கைது

# சென்னை அருகே தைவான்படகுகள் பிடிபட்டன

**சென்னை, ஏப். 1—சென்னை அருகில் 60 மைல் தொலைவில் தைவான் நாட்டு மீன் பிடிப் படகுகள் இரண்டை இந்தியக் கடற்படைக் கப்பல் மடக்கிப் பிடித்தது. அவைகளில் இருந்த 36 மீனவர்கள் கைது செய்யப்பட்டனர்.**

இந்தப்படகுகள் வங்கக் கடலில் மீன்பிடித்துக்கொண்டிருந்தன. இவை தைவானின் பதிவு செய்யப்பட்ட படகுகள் ஒவ்வொன்றும் 150 அடி நீளமுள்ளவை.

இந்தப் படகுகள் கிருஷ்ணபட்டினம் என்ற ஊரிலிருந்து 6 மைல் தொலைவில் மீன் பிடித்துக்கொண்டிருந்தன. இவற்றில் ஆயுதங்கள் எதுவுமில்லை. ஆனால், மிகவும் நவீனமான சாதனங்கள் இருந்தன. இந்திய கடற்படை கப்பலின் ஹெலிகாப்டர் நேற்று மாலை 3 மணிக்கு இந்தப் படகுகளுக்கு மேலே வட்டமிட்டுப் பறந்தபோது அவை எதிர்ப்பு எதுவும் காட்டவில்லை.

இந்த இரண்டு படகுகளும் இன்று அதிகாலை 2-45மணிக்கு சென்னை துறைமுகத்திற்கு வந்து சேர்ந்தன. கடற்படைக் கப்பல் காவலாக வந்தது. சென்னை போலீஸ் கமிஷனர் கே. ஆர். ஷெனாயிடம் அவைகளை ஒப்படைத்தனர்.

சுங்க இலாக்கா அதிகாரிகள் இந்த இரு படகுகளையும் துருவித்துருவி சோதனை போட்டனர். சீனமொழி அறிந்த அதிகாரிகள் அந்தப் படகில் இருக்கும் மீனவர்களிடம் விசாரணை செய்து வருகின்றனர். மீன் பிடிப்பதைத் தவிர வேறு ஏதேனும் நோக்கங்களுடன் இந்தப் படகுகள் வந்துள்ளனவா என்பதைக் கண்டறிய முயல்வதாக கடற்படை பொறுப்பு அதிகாரி கேப்டன் டி. பி மொகீந்தர் நிருபர்களிடம் கூறினார்.

மீன் பிடிப் படகுகள் அயல் நாடுகளில் கரையோரங்களில் நடமாடுவது சகஜம் என்றாலும் இந்தியக்கடல் எல்லைக்குள் இத்தகைய சம்பவம் நடந்திருப்பது இதுவே முதல் தடவை என்றும் அவர் கூறினார்.

ஒரு படகில் 5 டன் மீனும், மற்றொன்றில் 7 டன் மீனும் இருக்கிறது.

இன்று காலை போலீஸ் கமிஷனர் ஷெனாய் கடற்படை அதிகாரிகளுடன் இந்த படகுகளுக்குள் சென்று பார்த்தார்

இந்தப் படகுகளை என்ன செய்வது என்பது சட்டம் சம்பந்தப்பட்ட விஷயம். இவற்றைப் பறிமுதல செய்யவும் முடியும். அதிலுள்ள மீனவர்கள் தற்போதைக்கு அந்த பகுதிகளிலேயே இருப்பார்கள்

இந்த மீன் பிடிக் கப்பல்கள் நடமாட்டம் பற்றிய தகவல் கடற்படைக் கப்பலுக்குக் கிடைத்தபோது இந்தியக் கரையிலிருந்து 300 மைல் தொலைவில் கடற்படை கப்பல் இருந்தது.

இவ்வாறு மொகீந்தர் கூறினார்.

# எஸ். எஸ். எல். சி. பரீட்சை எழுதும் கைதி

கோவை, ஏப் 1— ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டுள்ள கைதி ஒருவர் கோவையில் எஸ். எஸ. எல். சி. பரீட்சை எழுதிவருகிறார்.

பஞ்சலிங்கம் என்னும் பெயர் கொண்ட அந்தஆயுள் கைதிக்கு தனி அறைஒதுக்கப்பட்டுள்ளது. அவர் அந்த அறையில் உட்கார்ந்து கொண்டு பரீட்சை எழுதுகிறார். அறை வாசலில் ஆயுதம் தாங்கிய காவலாளிகள் காவல் நிற்கின்றனர்.

பஞ்சலிங்கத்துக்கு ஒரு கொலை வழக்கில் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. அவர் "பிரைவேட்"டாக எஸ். எஸ். எல். சி. பரீட்சை எழுத அனுமதி அளிக்குமாறு அரசிடம் கோரினார். அரசு அனுமதி அளிக்கவே அவர் நேற்றிலிருந்து பரீட்சை எழுதி வருகிறார்.

பாங்கு ஊழியர் சங்கம் புகார்

## 'அரசுடைமை பாங்குகள் பணம் ஆளும்கட்சிக்கு நிதியாகிறது'

சென்னை, ஏப் 1— அரசுடைமை பாங்குகளில் பொது மக்கள் போடுகின்ற பணம ஆளுங்கட்சியின் நிதியுதவிக்கு பயன்படுத்தப்படுகிறதுஎன்று தேசிய பாங்க் ஊழியர் சங்கத்தலைவர் ஜி. எஸ். கோகலே குற்றஞ்சாட்டினார்.

அகில இந்திய கனராபாங்க் ஊழியர் சங்க மாநாட்டில் பேசும்போது அவர் மேலும் தெரிவித்ததாவது:—

"ஆளே இல்லாத பொய்யான நபர்களுக்கெல்லாம் கடன் உதவி அளிக்கப்பட்டு, பெரிய கடனுதவிகள் எல்லாம் திரும்பி வராத இனங்களாக கணக்கில் காட்டப்பட்டி தள்ளுபடி செய்யப்படுகின்றன.

வலது கம்யூனிஸ்ட் தலைமையில் உள்ள அகில இந்திய பாங்க் ஊழியர் தொழிற்சங்க இயக்கத்தில் சுயநல வாதிகளை வளர்த்து விட்டுள்ளது. கட்சி நலனுக்காக ஊழியர்கள் உரிமையை விட்டுக் கொடுத்துள்ளது" என்றும் அவர் கூறினார்.

மாநாட்டை பி. டி. தெங்காடி எம். பி. துவக்கிவைத்தார். எம். ஆர். பை பேசினார்.

## திருமணம்

சேலம். ஏப். 1—'தோகை' இதழின் ஆசிரியர் கவிஞர் ஆற்றலரசுக்கும் முத்தியாலு சாமி செட்டியாரின் மகள் பிரேமாவுக்கும் சேலம், செவ்வாய்ப்பேட்டை சௌராஷ்டிரா சத்திரத்தில் திருமணம் நடைபெற்றது. அமைச்சர், ராசாராம், அரசியல் பிரமுகர்கள், எழுத்தாளர்கள் பலர் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தனர்.

# போர் விமானங்களை ஓட்ட பயிற்சி

**இன்று இந்திய விமானப்படையின் ஆண்டு விழா நாள். போர் விமானங்களை ஓட்டுவதில் விமானப்படையினருக்கு அளிக்கப்படுகிற அற்புத பயிற்சியை இந்தக் கட்டுரை விளக்குகிறது.**

விமானம் ஓட்டுவது, சமிக்ஞைகள் பயிற்சி நிலையம் விமானப்படையின் முக்கிய பயிற்சி நிலையங்களுள் ஒன்றாகும். இந்த நிலையத்தில் விமானிகளுக்கும், சமிக்ஞையாளர்களுக்கும் அடிப்படை உயர்மட்ட பயிற்சியளிக்கப்படுகிறது. உலகத்தின் வேறெந்த பகுதியிலும் இத்துறையில் அளிக்கப்படும் பயிற்சியுடன் இந்த நிலையத்தில் அளிக்கப்படும் பயிற்சியை ஒப்பிடலாம். இந்தநிலையத்தில் பயிற்சி பெற்றவர்கள் இத்துறையில் சிறந்த முறையில் பணியாற்றுவதுடன், சிறந்த அதிகாரிகளாகவும் இருக்கிறார்கள்.

விமானம் ஓட்டுவதில் பயிற்சி:— இந்த நிலையத்தில் அளிக்கப்படும் விமானம் ஓட்டும் பயிற்சி இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவை: தரைப் பயிற்சி, ஆகாயத்தில் பயிற்சி.

தரைப்பயிற்சி: தரைப் பயிற்சியில் விமான இயல் விஞ்ஞானம், சேவைதொடர்புள்ள விஷயங்கள். இலக்கியம் முதலியவை போதிக்கப்படுகின்றன. விமான இயக்கல்வி விமானம் ஓட்டுவதில் உள்ள பல்வேறு நுணுக்கங்களை அறிந்துகொள்ள உதவுகிறது. இதனால் மாணவன் விமானம் ஓட்டுவதற்குப் புறப்படும் முன்பு இதில் உள்ள நுணுக்கங்களைப் பற்றி அறிந்துகொள்ள முடியும். சேவை தொடர்புள்ள விஷயங்களும் இலக்கியம் முதலியவையும் நிர்வாகம், சேவையின் பல்வேறு அம்சங்கள் ஆகியவை பற்றி அறிந்துகொள்ள உதவுகின்றன. இவை பயிற்சி பெறுபவரிடம தலைமை வகித்து நடத்திச் செல்லும் குணத்தையும் அதிகாரிபோன்ற குணங்களையும் வளர்க்க உதவுகிறது. இந்தக் கழகத்தின் ஒவ்வொரு நடவடிக்கையும் பயிற்சிபெறுபவர் தம் ஒழுக்கத்தையும், நல்ல வழக்கங்களையும் ஏற்படுத்திக்கொள்ள உதவுகிறது. தரையில் பயிற்சி அளிக்கும்போது நவீன ஒளி — ஒலிக் கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. இவை விஷயங்களை விரைவில் கிரகித்துக்கொள்ள உதவுகின்றன.

**ஆகாயத்தில் பறக்கும் பயிற்சி**

ஆகாயத்தில் பறப்பதற்கான பயிற்சி இதற்கெனவே மாற்றியமைக்கப்பட்ட நவீன கருவிகளைக் கொண்ட எச்எஸ் 748 விமானத்தில் அளிக்கப்படுகிறது. இந்தப் பயிற்சி, பெறுபவரை எல்லா வகை விமானங்களிலும், எல்லா வகை சீதோஷ்ண நிலைகளிலும் திறமையும், தன்னம்பிக்கையும் உள்ள விமானியாக செயல்பட வைப்பதில் கவனம் செலுத்துகிறது. ஒவ்வொரு புதிய முறையும் விமானி விரைவிலும் சுலபமாகவும் புரிந்துகொள்ளும் வகையில் கற்பிக்கப்படுகிறது. பயிற்சியளிப்பவர் பயிற்சி பெறுபவர் விரைவில் புரிந்து கொள்ளும் வகையில் சரியான முறைகளையும், நுணுக்கங்களையும் கற்பிக்கிறார். விரைவாகச் செயல்படுவது, சரியாகச் செயல்படுவது விமானத்தின் பாதுகாப்பு ஆகிய விஷயங்களில் பிரத்தியேக கவனம் செலுத்த பயிற்சி அளிக்கப்படுகிறது.

## பயிற்சி வகுப்புகள்

தற்போதைய பயிற்சி வகுப்புகள்:— இந்தப் பயிற்சி நிலையம் இப்போது விமானம் ஓட்டுவதற்கான அடிப்படைப் பயிற்சி உயர்மட்ட பயிற்சி, விமானிகள் பயிற்சி வகுப்பு ஆகியவற்றை நடத்துகிறது.

அடிப்படைப் பயிற்சி: வகுப்பில் சேரக் குறைந்த பட்சத் தகுதி பி. எஸ்சி. படம். இந்தப் பயிற்சி இரண்டு மட்டங்களில் அளிக்கப்படுகிறது இவை அடிப்படை, உயர்மட்டம். இந்தப் பயிற்சி 52 வாரங்களுக்கு நீடிக்கிறது. அடிப்படை மட்டத்தில் பயிற்சி பெறுபவர் முதல் எட்டு வாரங்களில் விமானம் ஓட்டுவதில் நுணுக்கங்கள் பற்றி நன்ருக அறிந்து கொள்கிறார். பிறகு விமானம் ஓட்டுவதின் அடிப்படைகள் பற்றி அறிந்து கொள்கிறார். பிறகு தரைப் பயிற்சியும். ஆகாயத்தில் பயிற்சியும் ஒரே காலத்தில் நடைபெறுகின்றன.

உயர்மட்டத்தில் இத்துறையின் விசேஷ நுணுக்கங்கள் பற்றி பயிற்சி பெறுபவருக்குக் கற்பிக்கப்படுகிறது. இதனால் எல்லா வித சீதோஷ்ண நிலைகளிலும் அவர் தைரியமாகச் செயல்பட முடிகிறது விமானத்தை ஓட்டுபவர்களில் ஒருவர் என்ற முறையில் அவருக்குத் தன்னம்பிக்கையும், பொறுப்புணர்ச்சியும் ஏற்படும் வகையில் பயிற்சியளிக்கப்படுகிறது. நவீன விமானங்களில் உள்ள நுணுக்கங்கள், நவீன விமானம் பார்க் கருவிகள் பற்றியும் அவருக்குப் பயிற்சியளிக்கப்படுகிறது. விமானப் படையில் விமானியாகப் பொறுப்பேற்றுக் கொள்ளுமுன் ஒருவர் சுமார் 150 மணி நேரம் ஆகாயத்தில் பறக்கிறார்.

விமானிகள் பயிற்சி வகுப்பு: இந்த 11 வாரப் பயிற்சி வகுப்பு போர் விமானங்கள், குண்டுவீசி விமானங்கள், போக்குவரத்துவிமானங்கள் ஆகியவற்றை ஓட்டும் விமானிகளுக்காக நடத்தப்படுகிறது. இந்த விமானிகள் மூன்று முதல் ஐந்து ஆண்டுகள் சேவை புரிந்தவர்களாக இருப்பார்கள். பயிற்சி காலத்தில் பயிற்சி பெறுபவர் சுமார் 30 மணி நேரம் பறப்பார். இது பெரும்பாலும் வெகு உயரே செல்லாமல் கீழேயே பறப்பதற்கான. பல்வேறு நுணுக்கங்களையுமறிந்து கொள்வதற்கான பயிற்சியாகும் சோதனை முறையில் துவக்கிய இந்தப் பயிற்சி வகுப்பு மிகவும் பலனுடையதாக இருக்கிறது. இந்தப் பயிற்சி பெற்ற விமானிகளின் திறமையைக் கருத்தில் கொண்டு எல்லா இளம்விமானிகளுக்கும் இந்தப் பயிற்சி கட்டாயமாக அளிக்கப்படுகிறது.

உயர்மட்ட பயிற்சி:— இந்தப் பயிற்சி ஆறு முதல் எட்டு ஆண்டுகள் சேவை அனுபவம் உள்ள விமானிகளுக்கு அளிக்கப்படுகிறது. இந்தப் பயிற்சி 21 வாரங்களுக்கு அளிக்கப்படுகிறது. பயிற்சி பெறுபவர் 54 மணி நேரம் பறக்கிறார்.

அவர்களுக்குவிமானம்ஓட்டுவதில் உள்ள மிக நவீன நுணுக்கங்கள் கற்பிக்கப்படுகின்றன.

## சமிக்ஞை பயிற்சி

சமிக்ஞை பயிற்சி:— விமான சமிக்ஞையாளர்களுக்கான பயிற்சி மீண்டும் 1974 ஜூலை மாதத்தில் துவக்கப்பட்டது. மின்னணுத்துறை, ஒயர்லெஸ் ராடார் ஆகிய துறைகளில் பணியாற்றும் அதிகாரிகளுக்கு இந்தப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இந்தப் பயிற்கி வகுப்பு 11—வாரங்களுக்கு நீடிக்கிறது. பல்வேறு அலை வரிசைகளில் நவீன தொலைத் தொடர்பு முறைகள் பற்றி பயிற்சி பெறுபவருக்குக்கற்பிக்கப்படுகிறது இந்திய விமானப்படையின் தொலைத் தொடர்பு கருவிகளைப் பயன்படுத்துவது மட்டுமின்றி, உலகத்தின் மற்ற பகுதிகளில் உள்ள விமான படைகளின் தொலைத் தொடர்பு கருவிகளைப் பயன்படுத்துவது பற்றியும் பயிற்சி பெறுபவர் அறிந்து கொள்கிறார். விமானத்தில் செல்லுமுன் விமானிக்குத் தரையிலேயே நிறையப் பயிற்சியளிக்கப்படுகிறது. இதனால் விமானத்தில் பறக்கும் நேரம் மிச்சமாகிறது. இதற்காகப் பயிற்சி நிலையத்திலேயே விசேஷ அறைகள் அமைக்கப்பட்டுள்ளன. இதனால் தரத்தை இழக்காமல் சிக்கனம செய்ய முடிகிறது.

பணிக்கு நேரடித் தொடர்புள்ள துறைகளில் பயிற்சியளிப்பது மட்டுமின்றி விமானம் ஓட்டுவதின் மற்ற துறைகளிலும் பயிற்சியளிக்கப்படுகிறது. உதாரணமாக விமானத்தின் பாதுகாப்பு.

விமானம் ஓட்டுவது சமிக்ஞை பயிற்சி நிலையம் விமானிகளுக்கும், சமிக்ஞையாளர்களுக்கும் பயிற்சியளிப்பதன் மூலம் விமானப்படை சிறந்த முறையில் பணியாற்ற உதவுகிறது.

விமானங்களின் வேகம் நாளுக்கு நாள் அதிகரித்து வரும் இன்று விமானம் ஓட்டுவது பெரும் முக்கியத்துவம் அடைந்துள்ளது. இதனால் விமானம் ஓட்டுபவருக்கு விமானத்துறையின் எதிர்காலத்தில் முக்கிய பங்கு இருக்கும்.

---

அருட்பேரொளி மன்றம்!

## கவியரங்கம்

சென்னை, ஏப். 1—அகில உலக அருட்பேரொளி மன்றம் சார்பில் மயிலை, அகில இந்திய சாயி சமாஜ மண்டபத்தில் (14-ந் தேதி) தமிழ்ப் புத்தாண்டு அன்று காலை 10-30 மணிக்கு கவியரங்கம் நடக்கிறது.

முன்னாள் நீதிபதி டி. எஸ். ராமலிங்கம் தலைமை வகிக்கிறார்.

'மங்களமாய் வாழ வேண்டும்' என்ற தலைப்பில் கவியோகி சுத்தானந்த பாரதியார், வான்முகில், எஸ். டி. சுந்தரம், ஆற்றலரசு, புலவர் நா. முருகவேள், செல்வி மதியொளி ஆகியோர் கவி பாடுவார்கள்.

காலை 8.30 முதல் வீணை இசையும், இசைவாணர்கள் வழங்கும் நல்லிசை நிகழ்ச்சியும் நடைபெறும்.

இவ்வாறு மன்றத்தின் தலைவர் சுத்த சத்வானந்தா அறிவிக்கிறார், முகவரி; சுத்த சத்வானந்தா, சிங்காரி நாய்க்கன் தெரு, மயிலாப்பூர் சென்னை;600004.

---

## உர விலை உயர்ந்தால் கிளர்ச்சி: விவசாயிகள் தலைவர் எச்சரிக்கை

சென்னை, ஏப். 1—உரங்களின் பகிரங்க மார்க்கெட் விலையைஉயர்த்தமத்திய அரசு முடிவு செய்தால் தமிழக விவசாயிகள் கிளர்ச்சியில் இறங்குவார்கள் என்று மாநில விவசாய சங்கத் தலைவர் சி. நாராயணசாமிநாயுடு தெரிவித்தார்.

அவர் மேலும் கூறியதாவது:—

கடந்தஓராண்டில்உரங்களின் விலைகள் 80சதவிகிதம் உயர்த்தப்பட்டன. ஆனால், அதே சமயத்தில் நெல், கரும்பு, பஞ்சு ஆகியவைகளின் விலைகள் உயர்த்தப்படவில்லை. உரங்களின் விலைகளை உயர்த்த வேண்டியது அவசியமென மத்திய அரசு உணருமானல், நெல்லின் லெவிவிலையைக் குவிண்டாலுக்கு ரூ. 74ல் இருந்து ரூ. 140 ஆக உயர்த்த வேண்டும்.

விவசாயிகளிடமிருந்து லெவி நெல்லைப் பெறுவதில் போலீசாரின் கெடுபிடி அதிகமாக இருக்கிறது. அதிகாரிகளின் நிர்ப்பந்தம் அளவுக்கு மீறியிருக்கிறது, குறிப்பாக தஞ்சாவூரில் இதுமிக அதிகம். விவசாயிகள் சங்கம் இதை வன்மையாகக் கண்டிக்கிறது என்றும அவர் சொன்னார்.

தஞ்சை மாவட்ட விவசாயிகள்கூட்டம நேற்றுமுன்தினம் தஞ்சை திலகர் திடலில் நடைபெற்றது சி.முத்துசாமி கவுண்டர், ஆர்.திருநாவுக்கரசுமுதலியார், ஏ.வி. நாராயணசாமி, துரைசாமி அய்யர், சி. வையாபுரி, ராமச்சந்திரன் ஆகியோர் பேசினார்கள்.

---

## எவரெஸ்ட் வீரரின் மனைவி விமான விபத்தில் மரணம்

காட்மாண்டு, ஏப். 1—முதன்முதலாக எவரெஸ்ட் சிகரத்தில் ஏறியவரான எவரெஸ்ட் வீரர் எட்மண்ட் ஹில்லேரியின் மனைவியும் மகளும விமான விபத்தில் சிக்கி இறந்தனர்.

இந்த விபத்தில் மற்றும 3 பேரும் உயிரிழந்தனர்.

இந்த 5 பேரும பிரயாணம செய்த விமானம காட்மாண்டு நகரிலிருந்து கிளமபி எவரெஸ்ட் அருகில் உள்ள ஓரிடத்துக்குப் போய்க் கொண்டிருந்தபோது விமானம கீழே விழுந்து நொறுங்கியது.

எவரெஸ்ட் வீரர் ஹில்லேரி எவரெஸ்ட் சிகரம அருகே உள்ள ஓரிடத்தில் பள்ளிகளையும ஆஸ்பத்திரிகளையும கட்டி வருகிறார். விமானம அந்த இடத்துக்குப் போய்க்கொண்டிருந்தபோதுதான் விபத்து ஏற்பட்டது.

---

மந்திரி ஓ. பி. ராமன் தகவல்

# இலங்கை அகதிகளுக்கு மறுவாழ்வு: ரூ. 7 கோடி செலவில் திட்டம்

**சென்னை, ஏப். 1—இலங்கை அகதிகளுக்கு மறுவாழ்வு அளிக்க ரூ. 612 லட்சம் செலவில் தேயிலைத் தோட்டங்களும், ரூ. 81 லட்சம் செலவில் ரப்பர் தோட்டங்களும் வளர்க்க அரசு திட்டமிட்டுள்ளதாக அமைச்சர் ஓ. பி. ராமன் தெரிவித்தார்.**

தமிழ்நாடு அரசு காடுகள் துறை மான்யக் கோரிக்கை மீது பேசும்போது வணிக வரித்துறை அமைச்சர் ஓ. பி. ராமன் நேற்று சட்டசபையில் கூறியதாவது:—

ஸ்ரீலங்காவிலிருந்து தாயகம் அனுப்பப்படும் அகதிகளுக்கும் மறுவாழ்வு அளிப்பதற்காக இத்துறை (1) நீலகிரி மாவட்டத்தில் தேயிலைத் தோட்டம் பயிரிடுவதற்கான திட்டம், (2) கன்னியாகுமரியில் ரப்பர் தோட்டங்கள் பயிரிடும் திட்டம் ஆகிய இரண்டு திட்டங்களை நிறைவேற்றி வருகிறது. இத்திட்டங்களுக்கு இந்திய அரசு நீண்ட காலக் கடன்மூலம் நிதி உதவி அளிக்கிறது.

1. நீலகிரி மாவட்டத்தில் தேயிலைத் தோட்டங்கள்-இத்திட்டத்தின் கீழ் நீலகிரி மாவட்டத்தில் ரூபாய் 612 லட்சம் மதிப்பீட்டுச்செலவில் 1,500 ஹெக்டேர் பரப்பளவில் தேயிலைத் தோட்டம வளர்க்கத் திட்டமிடப்பட்டுள்ளது,

இத்திட்டம் 1967-68-ல் தொடங்கப்பட்டது. இதுவரை 742 ஹெக்டேர் நிலத்தில் தேயிலை பயிரிடப்பட்டுள்ளது. 441 ஸ்ரீலங்கா அகதிக் குடும்பங்கள் இத்திட்டத்தின் கீழ் குடியமர்த்தப்பட்டுள்ளன. 853 பேர் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டனர். இது தவிர 92 ஸ்ரீலங்கா அகதிகள் அரசாங்க ஊழியர்களாகவும் பணிபுரிகின்றனர். 1975-76-ல் 204 ஹெக்டேர் பரப்பளவில் தேயிலைத் தோட்டம் வளர்க்கப்படும். இதற்காக ரூ. 62-05 லட்சம் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. 288 அகதி குடும்பங்கள் 1975—76-ல் குடியமர்த்தப்படும்.

2. ஸ்ரீலங்காவிலிருந்து தாயகம் திரும்பிய அகதிகளுக்கு மறுவாழ்வு அளிப்பதற்காக குமரி மாவட்டத்தில் ரப்பர் தோட்டங்கள் வளர்த்தல் திட்டத்தின் கீழ் குமரி மாவட்டத்தில் ரூ. 8148 லட்சம் மதிப்பீட்டுச் செலவில் 800 ஹெக்டேர் பரப்பளவில் ரப்பர்தோட்டங்களை வளர்க்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இத்திட்டம் 1970—71-ல் தொடங்கப்பட்டது. இதுவரை 661 ஹெக்டேரில் ரப்பர் பயிரிடப்பட்டுள்ளது. 145 இலங்கை அகதிக் குடும்பங்கள் இத்திட்டத்தின்கீழ் குடியமர்த்தப்பட்டுள்ளன. 280 பேர் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டனர். மேலும் 28 பேர் அரசு ரப்பர் தோட்டங்களில் வேறு பணிகளில் பணியாற்றுகின்றனர். சாலை கட்டிடப்பணிகள் நிறைவேற்றுவது தவிர 1975-76ல் 804 ஹெக்டேர் பரப்பளவில் ரப்பர் பயிரிடப்படும். இதற்காகத் திட்டமிடப்பட்ட செலவு ரூ. 36·27 லட்சம். கூடுதலாக 51 குடும்பங்கள் 1975-76ல் குடியமர்த்தப்படும்.

கிராமப்புற வேலை வாய்ப்புத் தீவிர முன்னேடித் திட்டம்:—தென் ஆற்காடுமாவட்டத்தில் மங்களூர் பகுதியில் மேற்குறிப்பிட்ட இத்திட்டத்தின்கீழ் கீழ்க்கண்ட திட்டங்களை வனத்துறை செயல்படுத்தி வருகிறது.

1. கிராமநலக் காடுகளை உண்டாக்குதல் 600 ஹெக்டேர்.

2. விறகு மரக்காடுகளை உற்பத்தி செய்தல் 420 ஹெக்டேர்.

இத்துடன் சாலை ஓர மரங்கள் நடவும் திட்டமிடப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் முக்கிய குறிக்கோள் குறிப்பிட்ட சில கிராமப்புறப்பகுதிகளில் வேலை வாய்ப்பை உண்டாக்குதலாகும்.

இத்திட்டம் மத்தியஅரசின் உதவி பெற்ற திட்டமாகும். இத்திட்டத்தின் மதிப்பீடு ரூ. 6·58 லட்சமாகும். இதுவரை, பயிரிடப்பட்ட 342 ஹெக்டேர்களுக்குஆகும் செலவு 2,42 இலட்சங்களாகும்.

வெட்டு மரங்கள், விறகு, தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருள்கள், ஏனைய காடுபடு பொருள்கள் இவைகளின் தேவை நாளுக்கு நாள் விரைவாக அதிகரித்துக் கொண்டே வருகிறது. காடுகளின் பரப்பு காடுபடு பொருள்களின் விளைச்சல் இவற்றை ஒப்பிட்டு நோக்குங்கால் தமிழ்நாட்டில் காடுகள் செல்வம் குறைவுதான். மேலும், மேலும் பெருகிவரும் மக்கட் தொகையாலும் மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வதாலும் இப்பற்றாக் குறை இன்னும் அதிகமாகத்தான் செய்யும் ஆகவே, தற்போதுள்ள காடுகளைக் கவனமாகப் பாதுகாப்பதும அவற்றின் உற்பத்தியினைமேமபடுத்துவதற்கான மும்முர வளர்ச்சித் திட்டங்களை மேற்கொள்ளுதலும இன்றியமையாததாகும மாநிலத்தின் பொருளாதார வளர்ச்சியிலும மக்களின் நல்வாழ்விலும காடுகள் அப்பொழுதுதான் முக்கியப்பங்கினை ஆற்ற முடியும.

இவ்வாறு அமைச்சர் ஓ.பி. ராமன் கூறினர்.

---

## ரத்த வெள்ளத்தில் வாலிபர் பிணம்

திருப்பதி, ஏப். 1—திருப்பதி மலையில் உள்ள ஒரு சத்திரத்தில்ஓர் அறையில் ஒரு வாலிபர் ரத்த வெள்ளத்தில் பிணமாகக் கிடந்தார். அவருக்கு வயது 25 இருக்கும். வெகுநேரம் வரை திறக்கப்படாமல் இருந்த அந்த அறையை, சத்திர ஊழியர்கள் திறந்து பார்த்தபோது இது தெரியவந்தது. இது பற்றிப் போலீசார் புலன் விசாரணை செய்து வருகிறார்கள்.

---

## சி.எஸ். கொடும்பாவி எரிப்பு முயற்சி: 16 பேர் கைது

சென்னை, ஏப். 1—மத்திய நிதி அமைச்சர் சி. சுப்ரமணியம கொடும்பாவியை எரிக்கமுயன்றதாக 16 பேரை போலீசார் கைது செய்தனர்.

இவர்கள் ஜெ. பி. சேனையைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது.

---

இலங்கையில் தமிழர் குடும்பத்தினர் அவதி:

## பத்திரிகை நிருபரின் பெருந்தன்மை

சென்னை, ஏப் 1—இலங்கையில் உள்ள ரப்பர் தோட்டங்களில்வேலை செய்யும் தமிழர்கள் அங்கு அடிமைகளாய்நடத்தப்படுவதும், பெரும் வறுமைக்கும் சங்கடத்திற்கும் உள்ளாகி, பெற்ற குழந்தையை அதன்தாயேவிலை கூவிவிற்கும் நிலைக்கு வந்திருப்பதும் தெரிந்ததே.

இதுபோன்ற சம்பவம் இன்னும் தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. ஒருதாய் தன் 10 வயது மகனை ஒரு பத்திரிகை நிருபரிடமே ரூ. 40-க்கு விலைகூறி விற்க முயன்றாள்.

அவளிடம் அந்த நிருபர், ஏன் பெற்ற குழந்தையை விற்கிறீர்கள் என்று கேட்டதற்கு, "என்ன செய்வது, வறட்சியின் கொடுமை. வேலையில்லை. பல நாட்கள் பட்டினி. இப்பொழுது நீங்கள் கொடுப்பதைக் கொண்டு ஏதாவது வாங்கிச் சாப்பிட்டுப் பிழைத்துக் கொள்வோம் என்றார் அந்தத் தாய்,

அந்தப் பையனின் மாமன் என்று கூறும் ஒருவர் தான் அந்தப் பையனை அந்த நிருபரிடம் கொண்டுவந்து சேர்த்தார்.

அந்தப் பையனை வாங்க மறுத்த அவர், அவர்கள் கேட்ட ரூ. 40க்குப்பதிலாக ரூ. 100 கொடுத்ததோடு, பையனையும் திருப்பிக் கொடுத்துவிட்டார்.

இதுபற்றிலண்டனிலிருந்து வெளிவரும் பத்திரிகை ஒன்றில் வந்துள்ள செய்தியில் மேலும கூறியிருப்பதாவது:-

பிரிட்டிஷ் தோட்டக்காரர்களால், இந்தியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட தமிழ் தொழிலாளர்கள் நாடற்றவர்கள். ஓட்டுரிமை இல்லாத அந்நியர்கள் அந்நாட்டிலேயே மிகக் குறைந்த கூலி வாங்குகிறவர்கள் இவர்கள்தான், ஒரு குடுமபத்திற்கு மாதம சுமார் 17 டாலர்தான் வருமானம வருகிறது என்று அப்பத்திரிகை கூறுகிறது.

---

தோட்டத் தொழிலாளர்களுக்கு

# அதிக ரேஷன் கேட்டு மறியல்: சர்வகட்சி தலைவர்கள் கைது

**கோவை, ஏப். 1—தோட்டத் தொழிலாளர்கட்கு அதிக ரேஷன் கோரி மறியல் செய்த சர்வ கட்சித் தொழிற் சங்கத் தலைவர்கள் போலீசாரால் கைது செய்யப்பட்டுள்ளனர்,**

இச்சம்பவம கோவை அருகில் உள்ள வால்பாறையில் நடந்துள்ளது.

இது பற்றிய விபரம் வருமாறு:

நீலகிரி மாவட்ட தோட்டத் தொழிலாளர் குடும்பங்கட்கு வாரத்திற்கு 5 கிலோ அரிசியும், 2 கிலோ கோதுமையும், ஒரு கிலோ ஆட்டா மாவும் ரேஷன்மூலம் வழங்கப்படுகிறது.

ஆனல் வால்பாறையில் உள்ள தோட்டத் தொழிலாளர்களுக்கு வாரத்திற்கு மூன்று கிலோ அரிசி மட்டும் தான் வழங்கப்படுகிறது. அதனல் அங்குள்ளவர்கள் மிகவும் கஷ்டப்படுகின்றனர்.

### மறியல்

நீலகிரி மாவட்டத்தில் உள்ள தொழிலாளர்கட்கு வழங்கும் ரேஷனைப் போல் தங்களுக்கும் அதிக ரேஷன் வழங்க வேண்டும் என்று தி.மு.க., ஏ.ஐ.டி.யூ.சி., ஐ.என்.டி.யூ.சி. தொழிற் சங்கங்களைச் சேர்ந்த தலைவர்கள் வால்பாறை துணை தாசில்தார் அலுவலகம முன மறியல் செய்தனர். மறியல் செய்த ஏ.ஐ.டி.யூ.சியைச் சேர்ந்த ஏ. டி. கருப்பையா, எம். கிருஷ்ணன், ஐ.என்.டி.யூ.சி. வி. எம். தியாகராஜன், மல்லி செட்டியார், தி.மு.க.வைச் சேர்ந்த பி. வி. பாலகிருஷ்ணன், சண்முகம் ஆகியோரை போலீசார் கைது செய்துள்ளனர்.

### உண்ணாவிரதம்

மறியல் போராட்டம் நடந்த அதே தினத்தில் வால்பாறை முழுவதிலும் உள்ள அனைத்து சங்கத் தொழிலாளர்களும் ஒரு நாள் அடையாள உண்ணாவிரதம் இருந்தனர்.

நியாயமான கோரிக்கைக்காகப் போராடிய தொழிற் சங்க தலைவர்கள் கைது செய்யப்பட்டுள்ளதை கண்டித்தும் இப்பிரச்னையில் மாவட்ட ஆட்சித் தலைவர் உடனடியாக தலையிட்டு, வால்பாறை பகுதி முழுவதும் நீலகிரியில்வழங்கப்படுகின்ற ரேஷன் அளவு போல் வினியோகிக்க கோரியும் கைது செய்யப்பட்டுள்ளவர்களை விடுதலை செய்ய வேண்டும் என்றும் கோவை மாவட்ட இந்திய கம்யூனிஸ்டுக் கட்சியின் இணைச்செயலாளர் பி. நாராயணன்வேண்டுகோள் விடுத்துள்ளார்.

---

# மாடு கடத்தலை தடுக்க சட்டம்: மந்திரி அறிவிப்பு

சென்னை, ஏப். 1—தமிழ் நாட்டிலிருந்து பிற மாநிலங்களுக்கு மாடுகள் கடத்தப்படுவதைத் தடுக்க தமிழக அரசு இந்த ஆண்டுக் கடைசிக்குள்ளாக ஒரு சட்டம் கொண்டுவரும்.

சட்டசபையில் கால்நடைத் துறை மான்யக்கோரிக்கை மீது நடந்த விவாதத்துக்குப் பதிலளித்து அமைச்சர் ஓ. பி. ராமன் பேசுகையில் இத்தகவலை அறிவித்தார்.

"தமிழகத்திலிருந்து நாள் ஒன்றுக்கு 5 ஆயிரம் மாடுகள் கேரளாவுக்கும் மற்றமாநிலங்களுக்கும் கடத்திச் செல்லப்படுவதாக அமைச்சர் தெரிவித்தார்.

"மாடு கடத்தலை தடுக்க குஜராத் போன்ற மாநிலங்களில் சட்டம் உள்ளது தமிழ் நாட்டிலும் அதுபோன்ற ஒரு சட்டம் இந்த ஆண்டுக் கடைசிக்குள் கொண்டுவரப்படும் என்று அமைச்சர் கூறினார்.

தஞ்சை மாவட்டத்தில் ஈச்சங்கோட்டையிலுள்ள பண்ணைக்காக மேமாத இறுதியில் டென்மார்க்கிலிருந்து 150 உயர்ரக மாடுகள் வரவழைக்கப்படும். பசுமாடு ஒன்றின் விலை ரூ. 10 ஆயிரம் ஒரு காளை மாட்டின் விலை ரூ 1 லட்சம். இது வீரிய முறைக்கப் பயன்படுத்தப்படும் என்றார் அமைச்சர்.

மாடுகளின் தரத்தை உயர்த்த தமிழகத்தில் 316 இடங்களில் செயற்கை முறை கருத்தரிப்பு நிலையங்கள் உள்ளதாகவும் அவர் சொன்னார்.

தமிழ்நாட்டில் அமைக்கப்பட்டுள்ள கோழி வளர்ப்பு வாரியம் மூலம் 1 லட்சம் முட்டைகளை விற்கத் திட்டம் உள்ளது என்றும் அமைச்சர் கூறினார்.

---

## போனஸ் தகராறு: மில் ஊழியர் கோரிக்கை

மதுரை, ஏப். 1—மதுரை, தூத்துக்குடி, சிவகங்கை ஆகிய இடங்களில் உள்ள கோட்ஸ் கம்பெனி பஞ்சாலை ஊழியர்கள், முதல்வர் கருணாநிதிக்கு ஒரு மகஜர் அனுப்பியுள்ளனர்.

அதில் தங்களுக்கு கிடைக்க வேண்டிய போனஸைத் தர நிர்வாகம் மறுப்பதாகவும் இதில் முதல்வர் தலையிட்டு தீர்வுகாண வேண்டும் என்றும் கோரப்பட்டுள்ளது.

---

# ரூ. 1 லட்சம் சிலைகள் சிக்கின

கும்பகோணம், ஏப். 1—பஞ்சலோகத்தில் தயாரிக்கப்பட்ட இரண்டு வள்ளி, தெய்வயானை சிலைகள் கும்பகோணம் நகரில் போலீஸாரால் கைப்பற்றப்பட்டன. இந்த சிலைகளின் உயரம் 2 அடி. இச்சிலைகள் சுமார் 500 ஆண்டுகளுக்கு முன்பு செய்யப்பட்டவை என்றும் அநேகமாக சோழர் காலத்தில் செய்யப்பட்ட சிலைகளாக இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது. சிலைகளின் மதிப்பு ஒரு லட்ச ரூபாயாகும்.

இச்சிலைகள் எந்த கோயிலை சேர்ந்தது, யாரால் கடத்தப்பட்டது என்பது பற்றிய விவரங்கள் தெரியவில்லை. இது சம்பந்தமாக இதுவரை யாரும் கைது செய்யப்படவில்லை.

தமிழக அதிகாரி தகவல்

# கட்டபொம்மன் காலத்து வரலாற்று ஏடுகள் அழிக்கப்பட்டன

பம்பாய், ஏப். 1— பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து முதன்முதலாகப் போரிட்ட மாவீரன கட்டபொம்மன் காலத்தைச் சேர்ந்த சுமார் 500 முக்கிய ஏடுகள் அழிக்கப்பட்டுவிட்டன என்று தமிழ்நாடு ஆவணக்காப்பக கமிஷனர் பத்ரிநாத் தகவல் வெளியிட்டுள்ளார்.

பம்பாய் சஞ்சிகை ஒன்றுக்கு அளித்த பேட்டியில் அவர் இத்தகவலைத் தெரிவித்துள்ளார்.

வரலாற்று முக்கியத்துவம் கொண்ட தஸ்தாவேஜுகள் ஆவணக் காப்பகத்தில் வைக்கப்பட்டுள்ளன. இக்காப்பகத்துக்கு பத்ரிநாத் கமிஷனராக இருந்து வருகிறார்.

பீகார், மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான், உத்தரப்பிரதேசம் முதலிய மாநிலங்களில் வரலாற்று முக்கியத்துவம் கொண்ட தஸ்தாவேஜுகள் ஏந்தா பழைய காகிதங்களை தீர்த்துக் கட்டும் முறையில் அழிக்கப்பட்டுள்ளன அல்லது பழைய பேப்பர் போல விலைக்குப் போடப்பட்டுள்ளன என்றும் பத்ரிநாத் மேற்படி பேட்டியில் கூறியுள்ளார்.

தமிழ் நாட்டைப் பற்றி அவர் கூறுகையில் 1969 லிருந்து 1973 வரையிலான காலத்தில் தமிழ்நாடு ஆவணக் காப்பக அதிகாரிகள் கழித்துக்கட்டும் நடவடிக்கையை மேற்கொண்டு வரலாற்று முக்கியத்துவம் கொண்ட 86,208 தஸ்தாவேஜுகளை அழித்துவிட்டனர் என்றார். இதில் வீரபாண்டிய கட்டபொம்மன் பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துப் போரிட்டது சம்பந்தமான சுமார் 500 தஸ்தாவேஜுகளும் அடங்கும் என்று அவர் கூறினார்.

தஸ்தாவேஜுகளை அழிப்பதற்கு அனுமதி அளிக்கவில்லை என்று தமிழகஅரசு மறுத்துள்ளது அழிக்கப்பட்ட தஸ்தாவேஜுகள் கிழக்கிந்திய கம்பெனி ஆட்சி காலத்தைச் சேர்ந்தவையென தங்களுக்குத் தெரியாது என்றும் அரசு கூறியது. வழக்கமாக ஓர் ஆபீசில் நடைபெறுகின்ற களையெடுப்பு என்று கருதியதாகவும் அரசு கூறியது'' என்று பத்ரிநாத் தனது பேட்டியில் கூறினார்.

## அரசு உத்தரவு

பல முக்கிய தஸ்தாவேஜுகள் அழிக்கப்பட்டதை அறிந்த பத்ரிநாத் உடனே இந்த விஷயத்தை தமிழக அரசின் கவனத்துக்கு கொண்டு வந்தார். அதன்பேரில் ஆவணக் காப்பகத்திலும், மாவட்ட கலெக்டர் ஆபீசுகளிலும் மேற்கொண்டு தஸ்தாவேஜுகளை அழிக்கக்கூடாது என்று தமிழக அரசு உத்தரவிட்டது.

ஐரோப்பியர்கள் தமிழ் நாட்டில் வந்து இறங்கியது முதற்கொண்டு அவர்களுடைய நடவடிக்கைகள் பற்றிய அரிய தஸ்தாவேஜுகள் தமிழ்நாடு காப்பகத்தில் உள்ளன. 1786 முதல் 1828-ம் ஆண்டு வரையிலான காலத்தைச் சேர்ந்த 30 லட்சம் தஸ்தாவேஜுகள் உள்ளன. வேதனை என்ன வென்றால் அழிக்கப்பட்ட தஸ்தாவேஜுகளுக்கு பிரதி எடுக்கப்படவே இல்லை'' என்று பத்ரிநாத் கூறினார்.

''முக்கிய தஸ்தாவேஜுகள் அன்னியருக்கு நல்ல விலைக்கு விற்கப்பட்டனவா என்று தெரியவில்லை, எனினும் இப்படி நடந்திருக்கலாமெனபேச்சுஉள்ளது'' என்றும் பத்ரிநாத் சொன்னார்,



Printed by S. V. G. Sowrirajulu at the M.C.P. P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Honorary Editor: N. Muthukumarasami

## திருட்டுப் பொருள் பொருட் காட்சி

சென்னை, ஏப். 1— ரூ. 35 லட்சம் பெறுமானமுள்ள களவுப் பொருள்கள் கண்காட்சியை முதல்வர் கருணாநிதி நேற்று துவக்கி வைத்தார்.

கடந்த ஒரு வருடத்தில் நகரில் நடந்த பல திருட்டுகளில் களவாடப்பட்டு போலீசாரால் கண்டுபிடிக்கப்பட்ட பொருள்கள் இப்பொருட்காட்சியில் இடம்பெற்றுள்ளவ. பாந்தியன் சாலையில் போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் பொருட்காட்சியில் இடம் பெற்றுள்ள ஒவ்வொருபொருளும் திருடனின் கைவரிசை, களவாடும் முறை துப்பு துலங்கியவிதம் முதலிய கதைகளைக் கூறும்.

கீழ்ப்பாக்கம் தோட்டத்தில் 1974 மார்ச் மாதத்தில் சிந்தி பாங்கர் கொலையுண்டது நினைவிருக்கலாம். அதன் கதை பூராவையும் ''டேப்''பில் நிருபர்கள் மீண்டும் கண்டனர்.

ஜெர்ரிலாயிட் உபயோகித்த போலி பயண அனுமதிப்பத்திரங்கள், பொய்க் கடன் கார்டைக் காட்டி வாங்கிய ரூ 10,000 மதிப்புள்ள கம்பிளிக் கோட்டு சிவபுரம் நடராஜா சிலை படம், அபார விலை கொடுத்து அதை வாங்கி வைத்திருக்கும் நார்ட்டன் சைமன் படம், கள்ள இருபதுரூபாய் நோட்டு அடிக்கும் அச்சுயந்திரம் முதலியன உள்ளன.

கிரிக்கெட் டெஸ்ட், ஆர்ப்பாட்டங்கள், ஊர்வலங்களின் போது ''போலீஸ் செயல்படும்'' முறையை விளக்கும் படங்கள் உள்ளன. முதல்வர் கருணாநிதிக்கு அவைகளை ஐ. ஜி. அருள், கமிஷனர்ஷெனாய் விளக்கி வைத்தனர்.

இந்தக் கண்காட்சியை பொதுமக்கள் காலை 10 மணி முதல் பகல் 1 மணி வரை பார்வையிடலாம். பிற்பகல் 3 மணி முதல் இரவு 7 மணி வரை அழைப்பின்பேரில் வருவோர் அனுமதிக்கப்படுவர்.

வன்முறையாளருக்கு

# வெடிகுண்டுகளை விற்கும் கோஷ்டியை பிடிக்க முயற்சி

புதுடெல்லி, ஏப். 1— வெகுடிண்டுகளை வீசும் வன்முறையாளருக்கு ரகசியமாக வெடிகுண்டுகளை அளிக்கும் கும்பலைக் கண்டுபிடிக்க நாடு பூராவிலும் தீவிர வேட்டை நடந்துவருகிறது.

''வெடி குண்டுகளும் வெடி மருந்துகளும் எப்படி கள்ளத்தனமான முறையில் பெறப்படுகின்றன என்பதைக்கண்டு பிடித்தாக வேண்டும் என்று மத்திய அரசு செய்த முடிவைத் தொடர்ந்து இந்த 'வேட்டை' மேற்கொள்ளப்பட்டுள்ளது.

வெடி குண்டுகளை விற்கிற கும்பலைக்கண்டு பிடிக்கும் முயற்சியில் நாடு பூராவிலும் துப்பறியும் நிபுணர்கள் ஈடுபட்டுள்ளனர்.

சமீபத்தில் மத்திய ரெயில்வே மந்திரி மிஸரா மீது வெடிகுண்டு வீசப்பட்டு அவர் படுகொலை செய்யப்பட்டார். பின்னர் பிரதமர் இந்திரா காந்தி அலகாபாத் கோர்ட்டில் சாட்சியம் அளிக்கச் சென்றபோது கோர்ட் அருகே துப்பாக்கியுடன் ஒருவர் பிடிபட்டார். டெல்லியில் சுப்ரீம்கோர்ட் தலைமை நீதிபதியின் காருக்குள் 2 வெடிகுண்டுகள் வீசப்பட்டன. அக் குண்டுகள் நல்ல வேளையாக வெடிக்காத காரணத்தால் அவர் உயிர் தப்பினார்.

இவ்வித வன்முறைச் சம்பவங்களைத் தொடர்ந்து மத்திய உள்துறை அமைச்சகம நாட்டின் பாதுகாப்பு ஏற்பாடுகள் பற்றி ஆராயுமாறு உத்தரவிட்டுள்ளது.

மேற்படி சமபவங்கள்திட்டமிட்ட சதி வேலையின் விளைவாக நடந்தவையா என்று அறிய மத்திய அரசு விருமபுகிறது.

வன்முறைச் சமபவங்களை சமாளிக்க தகுந்த யோசனைகளை கூறுமாறு மாநில அரசுகளும் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளன.

வெளிநாடுகளிலிருந்து ஆயுதங்கள் கடத்தி வருவதைத் தடுக்க எல்லைப் பாதுகாப்பையும் வலுப்படுத்த மத்திய உள்துறை அமைச்சகம் முடிவு செய்துள்ளது.

அதிகார பீடத்தில் உள்ள தலைவர்களைத் தாக்கி மக்களிடையே பீதியை உண்டாக்கும் திட்டமிட்ட சதியின் விளைவாகவே சமீபத்தில் வன்முறைச் சம்பவங்கள் நடந்துள்ளதாகக் காட்டும் சான்றுகள் கிடைத்ததும் மாநில முதல்வர்களுடனும் இந்த விஷயம் பற்றி மத்திய உள்துறை அமைச்சகம் விவாதம் நடத்தும்.

# அ. தி. மு. க. தனித்து போட்டியிட முடியுமா? காமராஜ் கேள்வி

சேலம், ஏப். 1— ''அ. தி. மு. க. வருகிற தேர்தலில் தனித்துப்போட்டியிடமுடியுமா'' என்று பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜ் கேட்டுள்ளார்.

பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜ் சேலம மாவட்டத்தில் வாழப்பாடி, நாமகிரிப்பேட்டை, காளப்பநாயக்கன் பட்டி, ராசிபுரம ஆகிய பல ஊர்களில் சுற்றுப்பயணம செய்தார். பல பொதுக் கூட்டங்களில் பேசினார். அவர் கூறியதாவது:—

## தனித்துப் போட்டியிட பயம்

''நினைத்ததை முடிப்பேன்'' ''நான் ஆணையிட்டால்'' என்றெல்லாம் எம். ஜி. ஆர். பேசுகிறார். அப்படிப் பேசுகிறவர் தேர்தலில் தனித்து நிற்பதுதானே! ஆளும் காங்கிரஸ கட்சிக்குப் பின்னால் ஓடுவதேன்?

தேர்தலில் தனித்துப் போட்டியிட்டு ஜெயித்து வந்து ஆணையிடுவது தானே? நினைத்ததை முடித்து வைப்பது தானே?

அவருக்குத் தனித்து நின்று போட்டியிட பயம்!

ஒரு காகிதத்தில் புகார் மனு எழுதிக்கொடுத்தால் ஆட்சி கவிழ்ந்துவிடுமா? அப்படிக் கவிழ்வதானால் இந்தியா முழுவதும எழுதிக் கொடுத்து ஆட்சிகளைக் கவிழ்த்துவிடலாமே! மக்களை ஏமாற்ற ஏதேதோ எழுதுகிறார்கள், பேசுகிறார்கள்

அ. தி. மு. க. வும் ஆளும் காங்கிரசும் கூட்டுச் சேர்ந்தாலும் வெற்றி பெறமுடியாது. அவர்கள் ஒருவருக்கொருவர் ஒத்த கொள்கை உடையவர்கள் அல்ல. அவர்கள் வேறு வேறு கொள்கைகள் உடையவர்கள். தி. மு. க. வுடன் சேர்ந்ததால் ஏற்பட்ட கதி தான் ஆளும் காங்கிரசுக்கு அ. தி மு க. வுடன் சேர்ந்தாலும் ஏற்படும்.

அவர்களைத் தமிழக மக்கள் தோற்கடித்தே தீருவார்கள். திமுகவும் வெற்றிபெற முடியாது. அவர்கள் யாரோடு கூட்டுச் சேர்ந்தாலும் மக்கள் ஏமாற மாட்டார்கள்.

## வருங்காலம் என்ன ஆவது?

இன்று இந்த நாட்டில் சோற்றுக்குக்கூட இல்லாத அவல நிலை ஏற்பட்டிருக்கிறது இந்த நாட்டு மக்களுககு நல் வாழ்வு ஏற்பட வேண்டும் அதை நான கண்ணால்பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். இதற்காகத்தான் பாடுபடுகிறேன்.

சிலர் என்னென்னமோ பேசுகிறார்கள். எனக்கு இனி என்ன வேண்டும? பத்து ஆண்டுகள் முதன்மந்திரியாக இருந்துவிட்டேன். இனி எனக்கு என்ன வேண்டும்?

இப்படியே போனால் நாட்டின் வருங்காலம என்னாவது? மக்கள சிந்தித்துச் செயல்பட வேண்டும

இவ்வாறு காமராஜ் கூறினார்.

## கம்ப்யூட்டர் பற்றிய பட்டப் படிப்பு

சென்னை, ஏப் 1— கிண்டி என்ஜினியரிங் கல்லூரியில் கம்ப்யூட்டர் பற்றிய பட்ட மேற்படிப்பு அடுத்த ஆண்டு துவங்கும் என்று கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் இன்று சட்டசபையில் தெரிவித்தார்.

இந்தப் படிப்புக்கு 1 லட்சம் ரூபாய் செலவில் கருவிகள் மட்டும் வாங்கவேண்டியிருக்கும் என்றும் அமைச்சர் கூறினார்.

பூவிருந்தவல்லியில்நடந்த அண்ணா சிலை திறப்பு விழாவில் அமைச்சர் நெடுஞ்செழியன் கலந்துகொண்டார்.

## கடற்கரையில் இளம்பெண் பிணம்

சென்னை, ஏப். 1—சென்னை கடற்கரையில் ஒரு இளம பெண் பிணமாகக் கிடந்தாள், அவளுக்கு சுமார் 30-வயது இருக்கும் அந்தப் பெண்ணின் கழுத்தில் தாலியுடன் கூடிய 4 பவுன் தங்கச் சங்கிலி, கைகளில் 2 தங்க வளையல்கள், காதுகளில் தோடும் இருந்தன. உடல் முழுவதும் வெள்ளைத் தழும்புகள் காணப்பட்டன.

விசாரணையில் அந்தப்பெண், கோவை மாவட்டம் ஈரோட்டைச் சேர்ந்த கருப்பு சாமியின் மனைவி என்பதும், அவள் பெயர் சொர்ணம்பாள் என்றும் தெரியவந்துள்ளது.

அவளுக்குக் குஷ்டரோக நோய் பரவி உள்ளது என்று வீட்டில் உள்ளவர்கள் சொன்னதால், மனம் புண்பட்ட அவள் சென்னைவந்து கடலில் குதித்து தற்கொலை செய்து கொண்டிருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

## சிமெண்ட் உற்பத்தி குறைவு: சாதிக் விளக்கம்

சென்னை ஏப் 1— தொழில்களுக்கு தேவைப்படும் எண்ணெய் தட்டுப்பாடு காரணமாக சிமெண்டு உற்பத்திக் குறைந்துபோனதாக தொழில் அமைச்சர் சாதிக் பாட்சா இன்று சட்டமன்றத்தில் தெரிவித்தார்.



## தமிழ்நாடு அரசு 74-வது பரிசுச் சீட்டு குலுக்கல் முடிவுகள்

குலுக்கல் தேதி 31—3—1975 குலுக்கல் நடைபெற்ற இடம்: ராஜாஜி ஹால்

### "ME" வரிசை

பரிசு பெற்ற எண்கள்

ஒரு முதல் பரிசு, பரிசு தொகை ரூ. 1 லட்சம்

692220

இந்த எண்ணுக்கு முன்னும் பின்னும் உள்ள இரண்டு பரிசுச் சீட்டுகளுக்கும் தலா ரூ. 1,000 ஆறுதல் பரிசு அளிக்கப்படும்.

692219 692221

இரண்டு இரண்டாவது பரிசுகள்
பரிசு தொகை ரூ. பத்தாயிரம்

611710 730459

இந்த இரண்டு பரிசுச் சீட்டுகளின் முன்னும் பின்னும் உள்ள நான்கு பரிசுச் சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசாக தலா ரூ. ஐந்நூறு வழங்கப்படும்.

| | |
|---|---|
| 611709 | 6 17 1 1 |
| 730458 | 730460 |

இருபத்தைந்து மூன்றாவது பரிசுகள்
தலா ரூ. ஆயிரம்

| | | |
|---|---|---|
| 051072 | 135764 | 138279 |
| 138694 | 138818 | 18 720 |
| 201071 | 245681 | 284723 |
| 330207 | 349864 | 385452 |
| 538676 | 546219 | 577889 |
| 616336 | 620630 | 646662 |
| 676435 | 749737 | 768614 |
| 769324 | 895258 | 945399 |
| 947609 | | |

நூறு நான்காவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. ஐந்நூறு

000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச் சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது ஐந்து எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுகளுக்கு பரிசு வழங்கப்படும்.

| | | |
|---|---|---|
| 08895 | 16312 | 25824 |
| 38663 | 47855 | 51585 |
| 56293 | 62826 | 79100 |
| 90939 | | |

ஐந்நூறு ஐந்தாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. நூறு

000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச் சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது நான்கு எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுகளுக்கு பரிசுவழங்கப்படும்.

1980 4047 5274 8912 9652

இரண்டாயிரம் ஆறாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. ஐம்பது

000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசு சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது மூன்று எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுகளுக்கு பரிசுவழங்கப்படும்.

409 731

### "MF" வரிசை

பரிசு பெற்ற எண்கள்

ஒரு முதல் பரிசு, பரிசு தொகை ரூ. 1 லட்சம்

913404

இந்த எண்ணுக்கு முன்னும் பின்னும் உள்ள இரண்டு பரிசுச் சீட்டுகளுக்கும் தலா ரூ. 1,000 ஆறுதல் பரிசு அளிக்கப்படும்.

913403 913405

இரண்டு இரண்டாவது பரிசுகள்
பரிசு தொகை ரூ. பத்தாயிரம்

360895 924994

இந்த இரண்டு பரிசுச் சீட்டுகளின் முன்னும் பின்னும் உள்ள நான்கு பரிசுச் சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசாக தலா ரூ. ஐந்நூறு வழங்கப்படும்,

| | |
|---|---|
| 360894 | 360896 |
| 924993 | 924995 |

இருபத்தைந்து மூன்றாவது பரிசுகள்
தலா ரூ. ஆயிரம்

| | | |
|---|---|---|
| 079961 | 118246 | 149619 |
| 232001 | 295770 | 393020 |
| 423309 | 454240 | 494158 |
| 564727 | 598629 | 632882 |
| 665591 | 743221 | 744330 |
| 754756 | 758045 | 788999 |
| 836673 | 837928 | 906870 |
| 923893 | 929335 | 934051 |
| 965691 | | |

நூறு நான்காவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. ஐந்நூறு

000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச்சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது ஐந்து எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுக்களுக்குபரிசுவழங்கப்படும்.

| | | |
|---|---|---|
| 03929 | 18766 | 37019 |
| 50533 | 54641 | 64903 |
| 66311 | 66625 | 75289 |
| 96225 | | |

ஐந்நூறு ஐந்தாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. நூறு

000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச் சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது நான்கு எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுக்களுக்குபரிசுவழங்கப்படும்.

2367 3354 4303 5362 7589

இரண்டாயிரம் ஆறாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் தலா ரூ. ஐம்பது

000000 முதல் 999999 வரையுள்ள எல்லா பரிசுச் சீட்டுகளிலும் கீழ்க்காணும் ஏதாவது மூன்று எண்களுடன் முடிவடையும் பரிசுச்சீட்டுகளுக்கு பரிசு வழங்கப்படும்

163 315

முதல் பரிசு, இரண்டாம் பரிசு, பெற்ற சீட்டுக்களை வைத்திருப்பவர்கள் பரிசுத் தொகையைப் பெற சென்னை அரசினர் தோட்டத்தில் உள்ள தமிழ்நாடு பரிசுச் சீட்டுத் திட்ட இயக்குநர் அலுவலகத்திலும், மூன்றாவது முதல் ஆறாவது பரிசு வரை பரிசுச் சீட்டுக்களை வைத்திருப்பவர்கள் பரிசுத் தொகையைப் பெற தமிழகத்தில் உள்ள எந்த ஒரு துணைக் கருவூலத்திலும் அதற்குரிய படிவங்களை நிரப்பிக் கொடுத்து குலுக்கல் நடந்த 28 நாட்களுக்குள் பரிசுகளை பெறலாம். எழுதித் தரவேண்டிய படிவங்கள், பரிசுகள் பெறவேண்டிய அலுவலகங்களில் கிடைக்கும். விண்ணப்பங்கள் நேரிலோ அல்லது ரிசர்வ் பாங்கு அட்டவணையில் உள்ள வங்கிகள் மூலமாகவோ கொடுக்கலாம். நான்கு வாரங்கள் கழிந்துவிட்டால் தாமதத்திற்குத் தகுந்த காரணம் கூறி இயக்குநருக்கு விண்ணப்பிக்கவேண்டும். பரிசு பெற்ற எண்கள் அடங்கிய விவரப் பட்டியல் தமிழக சிறப்பு அரசிதழாக வெளியிடப்படுகின்றது. மேற்படி பட்டியல் வேண்டுவோர் அதற்குரிய, கட்டணத்தை செலுத்தி விற்பனை அதிகாரி, அரசு வெளியீட்டு நிலையம், 166, அண்ணாசாலை, சென்னை — 600002 என்ற விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம். பரிசுச் சீட்டு விவரங்கள் பற்றி எதுவும் தேவைப் பட்டால் இயக்குநர், தமிழ்நாடு பரிசுச் சீட்டுத் திட்டம், அரசினர் தோட்டம், சென்னை - 600002 என்ற முகவரிக்கு எழுதவேண்டும்.

விண்ணப்பங்களைப் பெற்றுக்கொள்ள கடைசி தேதி: 27—4—1975